# LITERARY ESSAYS

## IN TAMIL

BY

Late PANDIT T. P. SIVARAMA PILLAI,
*Head Tamil Pandit, Hindu College, Tinnevelly.*

WITH AN

INTRODUCTION

BY

K. SUBRAMANIA PILLAI, M. A., M. L.,
*Advocate & Senior Lecturer, Law College, Madras.*



Published by
**THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS**
**PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.**

*April 1922.*

 [Price As. 12

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு—7

# அறிவுரைத் திரட்டு.

இது

திருநெல்வேலி, இந்து கலாசாலைத்

தலைமைத் தமிழ்ப் பேராசிரியராயிருந்து

காலஞ்சென்ற

தி. பா. சிவராமபிள்ளை யவர்கள்

இயற்றியது.

திருநெல்வேலித்

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்

கழகம் லிமிட்டெட்.

துன்மதி௵ பங்குனி மீ

# பொருளடக்கம்.

| | | |
|---|---|---|
| | | பக்கம் |
| முகவுரை. | | |
| நம் மக்கள் உடம்பு | ... | 1 |
| உடம்பின் அருமை | .. | 25 |
| கடவுள் வழிபாடு | ... | 44 |
| அன்பும், அறிவும் | ... | 48 |
| உண்மை | ... | 54 |
| சமயவாதம் | ... | 56 |
| வாழ்வு | . | 61 |
| கடவுள் வாழ்த்து | .. | 66 |
| குறையிரந்து நிற்றல் | ... | 70 |
| நெஞ்சறி வுறுத்தல் | . | 80 |
| பத்திரிகைகள் அல்லது புத்தகங்கள் | | 85 |
| அறிவும், நம்பிக்கையும் | ... | 93 |
| அன்பும், அறமும் | ... | 96 |
| இணக்கமற்ற திணைக்கு | .. | 98 |
| எம் இறைவரது திருமேனி | .. | 101 |
| ஆலயந் தொழுவது | .. | 111 |
| உண்மை யாராய்ச்சி (கடவுள் வடிவம்) | | 116 |
| தனிப்பாடல் | | 123 |



PRINTED BY C. MUNISAWMY MUDALIAR & SONS MADRAS

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சென்னை நியாய கலாசாலைப் பேராசிரியர்,

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை,

எம். ஏ., எம். எல்., அட்வகேட்

அவர்கள் எழுதிய

# முகவுரை.

இந்த "அறிவுரைத்திரட்டு" திருநெல்வேலியில், சில ஆண்டுகட்கு முன் ஆங்கில இந்து கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதராய்த் திகழ்ந்த திருவாளர் தி. பா. சிவராமபிள்ளையவர்கள் தாம் நடாத்திய "திருநாவுக்கரசு" என்னும் தமிழ்ப் பத்திரிகையில் எழுதிப் போந்த பொருளுரைகளுட் சிலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இதன்கண், இம்மை, மறுமை, வீடு என்னு மூன்றிற்கும் பெரு நன்மை பயக்கத்தக்க விழுமிய அரும் பொருள்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இந்நூலாசிரியர் தெள்ளிய தமிழ்ப் புலமையோடு, ஆங்கிலமும் பயின்று தமிழ்ப் போத காசிரியருட் தலை சிறந்திலங்கினர். ஆதலின், தாம் சொல்லுவதை எளிய செந்தமிழ் நடையிலே சுருக்கமாகவும், திட்ப நுட்ப நய மிகவும், எந்நெறியினரது அறிவிற்கும் பொருத்த மாகவும், திறம் பெற உரைசெய்வதில் மிக்க செவ்வி

படைத்தவர். விளக்கும் வண்ணம் தாம் எடுத்துக் கொண்ட பொருள் தலைப்புகளும் யாவர்க்கும் பொது வாயினவே. உடம்பினைப்பற்றியும் அறிவைப்பற்றி யும் அன்பைப் பற்றியும், கடவுள் வழிபாட்டைப் பற்றியும் அறிய விரும்பாதார் யாவர்? ஆராய்ச்சி நயத்தினைச் சிறு மாணவர்க்கும் இனிதா யெளிதாய் விளக்குவதில் இணையற்றது இந்நூல். ஆதலால் தற் காலத்து உரை நடை நூல் எழுதும் பலர்க்கும் இது வழித்துணையாச் சிறந்த முன் மாதிரியாகக்கொள்ளற் பாலது. இனைய கட்டுரைக் கோவையினை ஆங்கிலம், தமிழ் பயிலும் கலாசாலை மாணவர்க்குப் பாடமாக வைப்பதே, ஆசிரியரது தமிழ்த் தேர்ச்சியின் பெரும் பயனைத் தமிழுலகத்திற்கு நிலைபெற வழங்கும் நன் முறையாகும். இளைஞர், இதைப் பயில்வதால் அழகு, பெறத் திட்பமுறத் தமிழ் எழுத அறிதல் எளிதாகும். செந்தமிழிலக்கிய வகைகளாய நீதிநூல்கள், அருட் பாடல்கள், உண்மை நூல்கள் முதலியவற்றினின் றெடுத்த மேற்கோள்களை இடமறிந்து செவ்வையாக, அணியில் மணி பதித்தமைபோல வழங்குமுறையினை நம் மாணவர் நன்கு பயில்வதற்கு இந்நூலே சிறந்த சாதனமாகும். தமிழ்ப் புலவர் தலை மணியன்ன விளங்கிய இந்நூலாசிரியரது பெருநன்றியை நமது நினைவின்கண்ணே நிலைபெறச் செய்யும் வண்ணம் திருநெல்வேலி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தார் வெளியிட்ட இவ்வரிய உரை நடை நூலினைத் தமிழ் மாணவர் விழைவுடன் போற்றுவாராக.

கா. சுப்பிரமணியம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நம் மக்கள் உடம்பு.



நல்லுடம்பு, நல்லறிவு, நல்லொழுக்கம், நல்லுயிர் என்னும் இந்நான்கும் நிரம்பப் பெற்றவனே நிறைந்த மனிதன்; இந்நான்கனுள் ஒன்றும் பலவுங் குறைந்த மனிதன் கால்மனிதன், அரைமனிதன், முக்கால்மனிதன் அல்லது, இவ்வளவைகள் முன்னும் பின்னுமான பின்னமனிதன்; இவருள் ஒருவரினும் படாதவன் என்ன மனிதன்?

நல்லுடம்பாவது நல்லறிவுமுதலிய ஏனையமூன்றையும் பெறுவதற்குச் சாதனமாகிய உடம்பு.

நல்லறிவாவது தன்னையும், தன்னையொழிந்த ஏனை மூன்றையும் நன்காராய்ந்து, சாவதானமாய்ப் பாதுகாத்துக்கொள்ளும் அறிவு.

நல்லொழுக்கமாவது அவ்வுடம்பையும், அறிவையும், உயிரையும் நல்லனவாக்குவதாய் அம்மனிதனிடத்தே காணப்படும் ஓர் செய்கை; அது மனம் வாக்குக் காயம் என்னும் இம் மூன்றையும் பற்றி நிகழும்.

நல்லுயிராவது நல்லுடம்பு, நல்லறிவு, நல்லொழுக்கம் என்னும் இவற்றாற் சிறப்பெய்தி, தான்

இவற்றைபெல்லாம்பெறுதற்குஇன்றியமையாத்துணை யாய்த் தனக்கு உள்ளும் புறமுமாய் உற்றுததன்னை உடனிருந்து இயக்கி உபகரிக்கும் தோன்றாத் துணை யாய் தன் முதல்வனையே நம்பி, அவனது அருள்வழி பெற்று, அவனது அருள்வழிப்பட்டு, அவனையே பெற்று இன்புறுகின்ற உயிர.

இந்நான்கையும், முன்னாளிலே யிருந்த நம்மவ ரிற், பெரும்பாலாரும நன்குபெற்றிருந்தார்களோ என்னவோ? அதுநமக்கு நன்றாய்த்தெரியவும் இல்லை; தெரிந்துகொள்ளுதற்குப் போதுமான சரித்திரங் களும் நம்மிடத்திலே இல்லை. ஐயோ! இனி வருப வர்களாவது எப்படி யிருப்பார்களோ? அதுவும் நமக்கு நன்றாய்த் தெரியவில்லை; தெரியவேண்டு மாயின், இப்பொழுது இருப்பவர்களைக் கொண்டு தானே தெரியவேண்டும்? இப்பொழுது இருப்பவா கள் யாா்? நாமும நம்முடைய பிள்ளைகளுந்தானே? நாம், இங்கே கூறிய நான்கும் ஒருங்கே, உள்ள படியே, பெற்றிருக்கின்றோமா, அல்லவா? வென் பதைப்பற்றி நன்றாய் அறிந்துகொள்ள வேண்டுபவா நாமேயல்லவா? அவ்விஷயத்தில் நாம் எப்படி யென் பது (நம்மிடத்திலே விருப்பும், வெறுப்புமின்றி யோசித்தால்) நமக்கே தெரியாதா? ஒருகால், அநு பவத்திலே, நம்மைப் பற்றி நமக்கே தெரிந்து கொள்ள முடியாவிட்டாலும், நம்முடைய பிள்ளை களைக்கொண்டாவது நம்மையும் அவருள்ளிட்ட நமக்குப் பின்வருபவர்களையும் பற்றி ஒருவாறுஊகித் தறிந்துகொள்ளலாம் அல்லவா? ஆகையால் இப்

பொழுதுள்ள நம்பிள்ளைகளைப் பற்றியே, இப்பத்திரிகையின் இடத்திற் கேற்பச் சிறிது பேசுவோம்:—

நம் பிள்ளைகட்கு இப்பொழுதுள்ள உடம்பு நல்லுடம்புதான் என்று சொல்ல இடமில்லை, இது தீர்மானமாய் நாமெல்லாம் * கண்கூடாகத் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயம். ஆகையால் அவர்களறிவையும் அவ்வளவாக நல்லறிவென்று எண்ண இடமில்லை; இவ்விரண்டும் போதுமளவிலேனும், நல்லனவாகாதபொழுது அவர் நல்லொழுக்கமும் அப்படியப்படித்தானே யிருக்கும் என்று எண்ண இடந்தருகின்றதல்லவா? இவ்வாறு ஆராய்தல் பற்றி நம்மை நம் பிள்ளைகள் கடிந்துகொள்ளாதிருக்கக் கடவர்; என்னை? அவர்மேல் நமக்கு அவ்வளவு உரிமையுண்மையாலும், அவரைச் சீர்திருத்தும் கடமை நமக்கே பெரிதும் உண்மையாலும் என்க.

இனி நல்லுடம்பும், நல்லறிவும், நல்லொழுக்கமுமாகிய இம்மூன்றும் போதுமளவிலாவது, நல்ல நிலையிலே இருக்கப்பெற்றுச் சிறப்படையாத அவருயிர், அவ்வளவிற்றேனும் நல்லுயிர் என்று சொல்லுதற்கு நமது மனம் எப்படித் துணியும்? துணியாதல்லவா? இனி அம்மூன்றும் இருக்கும் அளவிலாவது நன்னெறியினலே † அதிகரிக்கப்படாத பொழுது நாம் அவருயிரை நல்லுயிரென்று எண்ணுதற்கும், சொல்லுதற்கும் ஏன்றுகொள்வது எப்படி? நல்லுடம்பும்

---

* கண்கூடு—பிரத்தியட்சம்.

† அதிகரித்தல்—மேல்நின்று தன் கருத்திற் கிசையப் பயிற்றுதல்.

நல்லறிவும் ஆகிய இரண்டும் நல்லொழுக்கமும், நன்னெறியும் என்னும் அவ்விரண்டினாலும், அதிகரிக்கப்படாத பொழுது, அவற்றைத்தாளும் அவர்க்கு நல்லனவென்று கோடல் எவ்வாறு பொருந்தும்?

இப்படி நாலுவிதத்தாலும் நன்மையிற்குறைந்துள்ள நம்மக்கள் நாளடைவிலாவது, நம்முயற்சி வேண்டாது, தம்முயற்சியாகவே நன்முயற்சியிற்றலைக்கூடி, முற்கூறிய நன்மைகளிற் சிறந்து, நன்மக்களாகவே வாழ்ந்து, நமக்கும் இம் மாநிலத்து ஏனை மன்னுயிர்கட்டும் இனியராவரென் றெண்ணி, இனி அவரை நாம் நம்பிச்செல்வ தெப்படி?

இனியவர் நமக்கு இனியராவ தெப்படி? அம்முறையில் நாமும் இனியவராவ தெப்படி?

நம்மக்கள் தம் குழந்தைப்பருவத்தே, யாதொரு கன்மஷத்திற்கும் இடமின்றி, நம்மை இன்புறுத்தினர்; என்னை? *"மக்கண்மெய் தீண்டல் உடற்கின்பம்" என்பதூஉம், "அமிழ்தினும் ஆற்றவினிதே தம்மக்கள் சிறுகை அளாவிய கூழ்" என்பதூஉம், "குறுகுறு நடந்து தளர்நடைபயிற்றி" வரும் அவரது இளந்திருக்கோலம் ஆற்றவுங் கட் கினிதென்பதூஉம், அப்பாலரு வாயரை முத்தமிட் டுச்சிமோத்தல் துண்டத் துனைக்குத் தண்டாத் தமிழ் மணந்தருமென்பதூஉம், அவர் மழலைச்சொற் குழலினும் யாழினும் இனிதென்பதூஉம் நாமெல்லாம் அநுபவித்தறிந்த விஷயமே அன்றோ? நம்மக்கள் தம் குழந்தைப் பருவத்தே நம் ஐம்புலனும் ஆரத்தாய்க்கத் தம்

* திருக்குறள்.

உடம்பினால் இன்புறுத்துமாறு இது. இது இயற்கை யின் நிகழ்தலின், யாதோர் கன்மஷத்திற்கும் இடந் தருகின்றில தாயிற்று.

இனி, அவர் உடம்பு இயற்கையில் ஏற்கும் உண வையே ஏற்கின்றது; வேண்டா உணவை வேண்டு கின்றிலது. அதுவும் அற்றால் அழுதுபெற்று, அள வுடன் ஏற்கின்றது. அவ்வுடம்பு எப்பொழுதும் சுறு சுறுப்பாய்த் தொழிற்படுகின்றது. அது அளவுபட்ட முயற்சியையும், அமைதியையும் உடையதாகின்றது. அதனால் அது மலர்ந்த முகமும் அலர்ந்த நெஞ்சமும் உடையதாகின்றது. அதனையுடைய நம்மக்கள் அப் பருவத்தே ஆற்றவும் இன்புறுகின்றனர். அது கண்ட ாமும் அது. நம் மக்கள் தம் குழவிப் பருவத்தே தம் உடம்பியல்புபற்றித் தாம் இன்புறுவதால் நாம் இன்புறச் செய்யுமாறு இது. இதுவும் இயற்கையின் நிகழ்தலின், யாதோர் கன்மஷத்திற்கும் இடந்தரு கின்றில தாயிற்று.

மேலும், அவரது உள்ளம் படிகம்போல நிஷ் கல்மஷமாய் விளங்குகையால் அதன்வழிப்பட்டொ ழுகும் அவரது உடம்பு யாதோர் தீத்தொழிலும் செய்கின்றிலது. அதனால், அவ்வுடம்பு தன் தகுதி யில் மேன்மேலும் உறுதியுற்று ஓங்குகின்றது; ஓங் குந்தோறும் அவர் உணர்வு, தான் காணும் இவ் வுல கம் தனக்குப் புதுமையாய்த் தோற்றலின் வியப் புற்று, இவ்வுலகின்கண் அவர்க்கு முன்னரே தோற் றிய நம்மையே நம்பி, இதன்கண் ஒவ்வொன்றனையும் அதுவென், இதுவென் என விளங்க வினவுதலால்,

தானும் ஓங்குதற் கெழுந்து, உற்றுணர்கின்றது. இங்ஙனம் களமில் உள்ளமும், ஒள்ளியல் உணர்வும் புடைபெயருந்தோறும், அவை நம்மை மிகவும் இன்புறுத்துகின்றன; இன்புறுத்தலின், அவை நமக்கும் அவர்க்கும் ஒருங்கே மிக இனியவாய், அம்மட்டோ! பிறர்க்கும் மிக அழகிய ஆதல கண்கூடன்றே? நம் மக்கள் தம் குழந்தைப் பருவத்தே, தம் உள்ளமும், உணர்வும் என்னும் அவற்றது இயல்புபற்றி, அப்பருவத்திற்கு இயையத் தாமும் இன்புறறு, நம்மையும் பிறர் தம்மையும் இன்புறுக்குமாறு இது. இதுவும் இயற்கையின் நிகழ்தலின் இஃதாயிற்று.

இனி, இவ்விரண்டும் பற்றி, அவரிடத்தே நிகழக் காணும் அவரது ஒழுக்க முளையும் அது.

அவரது உயிர், நம்பி வழிபடும் நாட்டத்தது ஆகலின், அதுவும் அதுவே.

அதனால், அது அவர்க்கு மிக நல்லதாகின்றது. அந் நல்லுயிர்க்கு, அவரது குழநதை ஒழுக்கம் உறு துணையாய் நின்று உதவலின், அதுவும் அவர்க்கு நல்லதாகின்றது. அந் நல்லொழுக்கத்திற்கு அவர் தம் உட்கருவிகள் நேரே துணைபுரிந்து நிற்றலின், அவையும் அவர்க்கு நல்லவாகின்றன. அவரது புறக்கருவிகளோ, நேரே அவ் வுட்கருவிகளாற் புடைபெயர்ந்து, அவற்றால் ஆளப்படுதலின், அவையும் நல்லவாகின்றன. இவற்றிற்கெல்லாம் நிலைக்களமாதலோடு கருவியாதலையும் உடைய அவரது உடம்பும் அது.

இவ்வுண்மையெல்லாம் திருவுளத் தடைத்தே போலும், "சேய்போலிருப்பர் கண்டீர் உண்மை

ஞானம் தெளிந்தவரே." என்று உபதேசித்தருளினார் ஸ்ரீ பட்டினத்துப் பிள்ளையாரும்!!

இவ்வாறு நம்மக்கட்கு இயற்கையின் அமைந்த இந்நன்மைகளெல்லாம், இக் குழந்தைப் பருவத்தின் பின் நிகழ்வனவாய பருவங்களினும், இவ்வாறே வளர்ந்தோங்குதலின்றிப், பெரிதும் மாறுதல் அடைதற்குக் காரணம் என்னை? அது அவர் இடத்ததோ, நம்மிடத்ததோ வெனிற் சிறிதாராய்வாம்.—

## நம் மக்கள் உடம்பு.

புண்ணிய பூமியாகிய இப் பரதகண்டம் நம்மைப் பெறுகின்றது, வளர்க்கின்றது, அதனால் இது நமக்குத் தாயொத்திருக்கின்றது. இது முன்னொரு காலத்திலே, மிகவும் கொழுமையுடையதாய், வளம் பொருந்தி யிருந்தது. அதனால், அக்காலத்திலே, இதன் மக்களும் திடகாத்திரர்களாய் வளர்ந்தோங்கி இருந்தார்கள். அவர்கள் தம் தொழிலைக் கண்பின்றிச் செய்தார்கள். அச்செய்கை, தன்னை மீளவும் செய்தற்கு அவர் ஏன்றுகொள்ளும் விதமாய் அவர்களுடம்பைப் பாதுகாத்து வந்தது:--அவர்கள் தம் உடம்பின் பொருட்டு, எத்தனை விதமாகவோ உழைத்திருப்பதாய்க் கேள்விப்படுகின்றோம்,— உழுதனர், பசுக்காத்தனர், கைத்தொழில செய்தனர், வாணிபஞ் செய்தனர், வழிநடந்தனர், கடலோடினர், நீராடினர், விளையாடினர், நித்திய கன்மநெறி பேணினர், ஆசாரம் போற்றினர், ஊக்கமுடனே யோகு செய்தனர், ஊக்கமுடனே ஆக்கமுற்றனர். அவர் உடம்பும் அவர் செய்கையும் புலிக்குப்புதரும் புதர்க்குப்

புலியும்போல ஒன்றையொன்று பாதுகாத்துவந்தன. அதனாலும், அப்பொழுது இவ்வுலக மாதா, தன்னைத் தன்மக்களும், தன்மக்களைத் தானும் வளர்த்து வளம் பெற வாழும் நல்வாழ்வு பெற்றிருந்தாள். அவள் தானே, இக்காலத்தே, மிகவும் இளைத்துப் போயிருக்கின்றாள். தன் மக்களாகிய நமக்கு உணவு தருதற் கண்ணே, மிகக் களைத்துப்போகின்றாள். இவளுடைய இளைப்பும் களைப்பும் இவள் மக்களாகிய நமக்கும் உண்டாயிருக்கின்றன. இவள் இவ்வாறு இளைத்திருத்தற்குக் காரணம், இவள் தன் திருமேனியின் கொழுமை வளங் குறைந்துவருந்தோறும், அவ்வளத்தின் அளவிற்கு அதிகமாய்த், தன் மக்கள் பெருகிவரப்பெருவதேயாம். தன்மக்கள் பெருகிவருவதனால் இவள் இளைத்துப்போகவில்லை, தன்மக்கள் தனக்குப்போது மளவிலாவது ஊட்டங்கொடுத்துத் தன்னைப் பேணுதலின்மையாலும், தான் கொடுக்கும் பொருளைத் தன் மக்கள், தமக்கும் பயன்படுத்திக் கொள்ளாமற் றனக்கும் பயன்படுத்தாமற், பிறர்க்குத் திலதர்ப்பணம் பண்ணிவிட்டு, ஏமாந்து போய், ஒவ்வொன்றறகும் அவர் வழிமேல் விழி வைத்து அவரையே எதிர்பார்த்து, அவரிடத்தே தொங்கிக்கொண்டு கிடத்தற்கண் தமக்கு ஒரு சிறிதும் நாணமின்மையாலுமே, ஐயையோ! இப்படி இளைத்துப் போகின்றாள்!! இதனால், அவள் மக்களாகிய நாம் குண்டி வாங்கிப், பண்டி வீங்கி, முகங்கூம்பி, அகஞ்சாம்பிச், சோம்பித், தேம்பித் திரியுஞ் சவலைப்பிள்ளைகளைப் போல்கின்றோம். இப்படிப்பட்ட மக்களாகிய நம்மை இவள் வயிறு

வாய்த்ததும் பெற்றெடுத்ததும் இவளது துரதிர்ஷ்டமே யன்றோ? இவள் கணவராகிய துரைத்தனத்தார் இவளை ஒரு வகையால் கவனித்துவருகின்றாராயினும் இவள் மக்களாகிய நாம் இவள் பசித்திருக்கும் பொழுதும், இவள் திருமுலைக்கண் வாய்வைத்து விசித்திழுக்கின்றோம். இதனால் இவளது திருமுலைக் கண் பால் வருதலின்றி ரக்தமே வருகின்றது. அந்த ரக்தமும் சுத்தமுடையதன்று. இதனை உறிஞ்சி உவக்கும் நாம் இவளது உயிர்கொல்லுதலாற் றாய்க்கொலையே செய்கின்றோம். அதனாற் "றாய்க்கொலை சால்புடைத்தென்பாரும் உண்டு" என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகின்றோம். "முலைக்குத்து சவலைப்பிள்ளை அறியுமா?" என்றபடி நம்முயிர் போவதை நாம் அறிவதன்றி, நம்மால் இவளுயிர் போவதை ஒரு சிறிதுமே உய்த்துணர்வதில்லை. இதனை இவள் கணவராவது, இவளிடத்தே தமக்கிருக்கும் ஆர்வமிகுதியால், இவளிடத்தே தமது முழுக்கவனமுஞ்செலுத்தி, இவட்கு ஊட்டங்கொடுத்து உறுதி செய்வதற்கண் இவள் மக்களையே தொழிற்படுத்தி, மிகவும் ஊக்குவித்து அதனால் இவள் மக்களது சவலைத்தன்மை நீக்குவித்து, அவரை வளம்பெற வளர்த்துத் தம்மைத் தம் பகைவரும் அஞ்சத் தாங்க வைப்பராயின், தம் பெருங் குடும்பமாகிய இப்பரதகண்டத்திற்கு எவ்வளவு ஊக்கமும் ஆக்கமும் உண்டாம்! உண்டாயின் இவரை வெல்லவல்லவரும் உளராவரோ? இவர்க்கிணையாவா ரிம்மையின் எவர்? இதனை இவள் கணவர் நன்கு கவனித்திடாததென்கொலோ? "பிள்ளை

தான் வயதின் மூத்தாற் பிதாவின்சொற் புத்தி கேளான்" என்று அஞ்சுகின்றாரா? அஞ்சுவராயின் இவ்வசனம், "வயதின் மூத்த பிள்ளை" யைப்பற்றி யன்றோ வற்புறுத்துகின்றது? அறிவின் மூத்தபிள்ளை யைப்பற்றி ஒன்றும், தோன்றப் பேசுகின்றிலதே. அன்றியும், தம்மக்களைத் தம்மினும் அறிவு வளர்ச்சி யுடையவராக வளர்க்கத் தெரியாதவரன்றோ, தம் மக்களின் உடம்பு வளர்ச்சிக்கு அஞ்சுவார்கள்? ஆனல் இவள் மக்கட்கு அவ்வியல்பினராகிய பிதா வுடையராம் தௌர்ப்பாக்கியம் ஒன்றுமில்லை யென வும், அதுதான் இன்றுமில்லை இனி என்றுமில்லையென வும் நன்று நம்புகின்றோம் † "தம்மிற் றம மக்களறி வுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிது" என்பது பொய்யாமொழியே யன்றோ? இவள் சரித் திரத்திலே, இவள் எப்போதாயினுந் தன் கற்பழிந்த கதையுண்டா? * "கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை" என்னும் சூத்திரம் இவளிடத்தே, இவட்கே யுரியதாகவன்றோ எழுந்தது? † "சிறைகாக்குங் காப் பெவன் செய்யும் மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை" என இவள் ஓதுகின்ற இப் பொய்யாமொழிப் பொருளை இவள் கணவர் இன்னும் தம் உளங்கொளப் பல்காலும் பயின்று நன்றாக ஓர்த்துணர்வராயின், இவள் பொருட்டாவது இவள் மக்கள்பொருட்டா வது அவர் அஞ்சுவதியாதொன்றுமில்லை, இனி அஞ்ச வருவதுமில்லை. அன்றியும் † "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்" என்பதும் இவளையே

† திருக்குறள். * கொன்றை வேந்தன்.

யன்றோ? ¶ "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட் கிறையென்று வைக்கப்படும்" எனவும், *"அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன், நிகரில் குரவரிவர் தம்மைத் தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே யாவரும் கண்டநெறி" எனவும் வழிபட விதித்ததும் இவளேயன்றோ? † "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என அறிந்து வழிபடுவார் இவள் மக்களேயன்றோ? இங்ஙனமாகவும், இவளையும் இவள் மக்களையும் நம்பாமைக்குக் காரணம் யாண்டையது? காரணமுண்டாயின், அது எல்லாமறியவல்ல கடவுட்குத்தான் வெளிச்சம். ஒருவரையொருவர் நம்பாது நடைபெறும் ஓர் குடும்பம் உளதாயின், அதற்கு யாம் மிகவும் அஞ்சுகின்றோம். அவ்வியல்பினதாகிய குடும்பமோ நமது குடும்பம்! ஆம் என்று கூறற்கு ஒருபொழுதுந் துணியவுமாட்டோம். துணிவார் உளராயின், அவர் துணிவைப் பொருட்படுத்தவுமாட்டோம். இத்தகைய நன்மக்கள் நாம்; நம் கொள்கையும் இத்தகையதே; இதனை நிலைகுலைக்க வல்லாரெவர்? நம்மை இவள் கணவர் நன்கு கவனித்திடாராயின் அக்குற்றம் நம்மிடத்ததன்று. ஆகலின், இவர் கணவர் நம் குறைதீர்த்துவக்கும் கடப்பாடு பெரிதும் உடையவர். இதனை வற்புறுத்தற்கெழுந்து இத்துணையும் விரித்தது இதனால் நம் முடம்புக்கும் நம் மக்களுடம்புக்கும், நம்முலகமாதும் அவளை ஆளும் துரைத் தனத்தாரும் உத்திரவாதிகளாதல் சொல்லியவாறு

* ஆசாரக்கோவை. † கொன்றை வேந்தன். ¶ திருக்குறள்.

இனி, நம் இளைப்பிற்கும் களைப்பிற்கும் காரண ராவார் நம்முன்னோரெனக் கூறியொழிதல் நமக்குப் பாரமில்லாததுபோற் றோற்றலாம். ஆனால் அத் தோற்றரவு உண்மையல்ல. ஏனெனில் அவர் பாது காத்துவந்த பல ஆசாரங்களை அவர் பரம்பரையில் வந்த பலரும், காலந்தோறும், அவ்வக்காலத்திற் கேற்ற கோலந்தாங்கி, அவ்வப்போது, சிறிது சிறி தாய்ப் பையப்பையக் கைநெகிழ விட்டொழிய இக் காலத்தே அவர் வழிவந்த நாமும் அவற்றை அறவே கைவிட்டு, இதோ பாருங்கள் ஒன்றுமில்லையென்று கையடித்துக் கைவிரித்துக்காட்டத் தொடங்கிவிட் டோம். அதனால் அம் முன்னோரிடத்திருந்த ஆற்றல் நமக்கு இப்போது ஒன்றுமில்லாதொழிந்தது. அவர் செய்த செய்கைகள் பல நமக்கு அற்புதம்போலத் தோற்றுகின்றன. அவற்றைப்பற்றி வரும் கதைகளை கட்டுக்கதைகளென் றெண்ணுகின்றோம். இதுபற்றி அம்முன்னோரைக் குறைகூறுதலாற் பயனென்? அவரது அடிச்சுவடுபற்றி அவர் வழிப்படாத நம் மைத்தானே நாம் குறைகூறிக்கொள்வதல்லது? இன் னும் இதனால், நம் முன்னோராசாரம் முழுவதும் நலம் பயப்பனவேயா மென்று, ஒரு காரணமுமின்றி, முழு வது நம்பி, யாம் இங்ஙனம் ஒன்று கூறுகிறோமென்று கொள்ளற்க. அவற்றை ஆராயாதும், அநுட்டிக்கா தும், அவற்றின் நோக்கமறிந்து அதற்கியைய அநுட் டிக்காதும், அநுட்டித்தும் அதன் பயனறியாதும், ஒரே வழிப்பயனறியினும், புது ஆசாரத்திலோடும் நம் மனம்போன வழியே போய் அதனைப்பராமுகஞ்

செய்தும், நமக்கென வொன்றின்றி, நீர் வழிப்பட்ட புணைபோற் செல்வமும் அதிகாரமுமுடையார் ஆசாரமே சதாசாரமும் நாகரிகமுமாம் என மயங்கிமதித்து இவற்றை மதியாமையும், அதனாற் * "குணநாடிக் குற்றமுநாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்" என்னும் கொள்கையிற் குன்றியும், அதனாற் கொண்டனவெல்லாம் கோலமாய்க் கண்டன வெல்லாம் காட்சியுமாய் நடக்கும் நமக்கென்னோர் கொள்கை, அவற்றின்மேலுண்டோ வென்னும் அம்மாத்திரையே நினைத்தோம், அவ்வளவிலே கூறினேம். அன்றியும் அவற்றை விதிப்படி அநுட்டித்து அவற்றின் பயனறிதற்கு முன்னர், அவற்றைக் கைவிடற்கும் காரணமின்றே. நாம் கைவிடற்குக் காரணர் நம் முன்னோர்களா? அந்தோ! ஆனால், அம்முன்னோர் தேடி வைத்ததை மூடிவைத்து, முன்வராது, நமக்குச் சிறிது முன்வந்தொழிந்த நம்முன்னோர் சிலரைக் குறைகூறுதற்கண், எமக்கு யாதோர் தடையுமில்லை. ஆயின், அதுவுந்தான் நமக்கென்ன பயன் செய்யும்? இதனால், நம் குற்றத்தை நெடுநாள் முன்னின்ற நம் முன்னோர்மேற் சாட்டி, அவரை இப்பொழுதிருக்கும் நமக்கும் நம்மக்கட்கும் உத்தரவாதிகளாக்குதல் அநியாயமேயாம் என்பதும், அதனாற் பயன் ஒரு சிறிதுமில்லை யென்பதும் கூறியவாறு.

இனி, நாமே இவ்வாறு இளைப்புங் களைப்பும் உடையேம் ஆகும்பொழுது நம்மக்களின் இளைப்பிற்கும் களைப்பிற்கும் காரணம் குறிக்க வேண்டுவதும்.

* திருக்குறள்.

உண்டுசொல்லோ? அன்றியும் நம் மக்களுடம்பின் இளைப்புக்கும், களைப்புக்கும், வளர்ச்சிக்கும், தளர்ச்சிக்கும் நேரே காரணராவார் நம்மைத்தவிர அல்லது நம்மக்களின் தாய்மாரைத் தவிர வேறு யாவர் உள்ளார்? "விரையொன்று போடச் சுரையொன்று முளைக்குமா?" "எந்நிலத்து வித்திடினும் காஞ்சிரங் காழ் தெங்காகா" வன்றோ? "மகனுரைக்கும் தந்தை நலத்தை" என்பது பொய்யா? "தாயைப்போல பிள்ளை நூலைப்போல சீலை" என்னும் உலகச் சொற்குப் பொருளின்று? * "தக்கார் தகவிலரென்பதவரவர், எச்சத்தாற் காணப்படும்" என்னும் பொய்யாமொழியும் இப்பொருள் குறிப்பாற் போதிக்காதா? *"மகன் றந்தைக் காற்றுமுதவி யிவன்றந்தை என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்" என்னும் அதுவே இன்னும் இதையே வெளிப்பட விளக்காதா? நம்மக்கள் உடம்பு சம்பந்தப்பட்ட மட்டிலும் அஃது இளைத்தல், களைத்தல் முதலியவற்றிற்கு நம்மினும் நேரே காரணராவார் அம்மக்களின் தாய்மார்களே. எப்படி? விதையின்கண் உள்ள ஆற்றல் அவ்விதை முளைத்தற்குக் காரணமாவதல்லது அம்முளையைப் பிறபொருள்களின் துணை வலியின்றியே வளர்த்தற்கும் தளர்த்தற்கும் காரணமாவதில்லை. அவ்வளர்ச்சி தளர்ச்சிகள் நில முதலியவற்றாலுண்டாம். நிலமின்றி ஒன்று மமைதல் இல்லை. அதனால் அவற்றுள் நிலமே சிறப்புடையது. நிலத்தின் கொழுமையே வித்தின் கட்டோன்றும் முளையின் வளர்ச்சிக்கு அதிமுக்கிய

* திருக்குறள்.

காரணமாவது; ஏனையவெல்லாம் அதற்குத் துணை யாய் வலிசெய்து உடனின்று பருவப்படுத்துவன வாம். “நிலநலத்தால் நந்திய நெல்” என வருதலும் காண்க. ஆதலால் அந்நிலத்தை ஏருடையோர் “உரக்கால்” என்பர். அதேபோல, நம் மக்களாகிய கான்முளைகட்கு, அவர் தாய்மார்களே உரக்காலாவர். அத்தாய்மார்களின் திருமுலைப்பாலே நம்மக்களுடம்பு கொழுமை வளங்கொண்டு உறுதியடைதற்கு உரிய அதிமுக்கிய காரணமாவது. அதனால் அத்தாய்மார்கள் உடம்பைப் பெரிதும் பாதுகாத்தல் நம் கடமையாம். இதனை நாம் ஒரு சிறிதும் கவனிப்பதில்லை. அம்மட்டோ! நம் மக்கள் தம தாய்மார்கள் தமக்கருளும் இன்னமுதத்தின் குணமே தமக்குக் குணமாக எய்தப்பெறுவர். இதனையும் நாம கவனிப்பதில்லை. இதனை நன்கு கவனித்திடுவோமாயின், நம்மக்களின் குணத்தைச் சீர்படுத்தும் உபாயம் நமக்கு நன்கு விளங்குதல்கூடும். மூக்குணத்துள்ளே எக்குணம் வேண்டுமோ அக்குணத்தை நாமே நம்மக்கட் களித்தலும் கூடும். இதற்குப் பதார்த்தகுணவுணர்ச்சித் துணையும், மற்று அதன் பிரயோக விவேகமும் வேண்டும். நம்மக்கட்குத் தாய்ப்பாலைப்போல உறுதிநிலை தருவது வேறொன்றுமில்லை.

“வாய்நன் கமையாக் குளனும் வயிறாரத்
தாய்முலை யுண்ணுக் குழவியுஞ்—சேய்மரபிற்
கல்விமாண் பில்லாத மாந்தரு மிம்மூவர்
நல்குரவு சேரப்பட் டார்”

எனக் கூறியதும் இதுபற்றியேயாம். இங்ஙன மாகவும் நம்மிற் சிலர் அல்லது பலர் தம் அருமைக் கண்மணிக்குத் தாய்ப்பால் கொடுப்பிக்க மனமின்றிப் புதுநாகரிகம் கைக்கொண்டு போற்றிப் பாற்காரிகள் நியோகிக்கின்றனர். இதற்கு அத்தாய்மாரும் இணங்கிவிடுகின்றனர். இணங்கா தென்செய்வர் ? அந்தோ பாபம்! தானுங்கெட்டுச் சந்திரபுட்காணியுங் கெடுத்தாற்போல இப புதுநாகரிகத்தாற் சிற்சிலர் தம் குடும்பத்தையே யன்றித் தம்மொத்த பிறர் குடும்பங்களையும் கெடுத்து வருகின்றார்கள். இவரது தூர்ச்செய்கை நம் தேயத்திற்கு எத்தனைக் கெடுதிகள் செய்ய நினைத்திருக்கின்றதோ அதனை யாம் அறிகிற்கிலம்! தாய்ப்பாலல்லாத வேறு பால் எஃதாயினும், அது தான் பிறந்தவிடத்துத் தன்னோடுடன் பிறந்த எதனையும், தன்னோ டுடன்கொண்டு வருதலை, இவர் ஒரு சிறிதும் உற்று நோக்குவதில்லை ; "இவன் புலிப்பால் குடித்தவன்" "இவனெருமைப்பால் குடித்தவன்" என்னும் வழக்குண்மையும் இவர் நோக்குகின்றிலர். பாலினாலே மிருகமுந் தன் ஜாதி மாறுதல் காண்கின்றிலர். தாய்ப்பாலாற் பிள்ளையேயன்றித் தாயுஞ் சௌக்கியம் அடைதல் ஓர்த்துணர்கின்றிலர். பிள்ளைப்பேறெய்துதற்குச் சத்தியுடைய தாய் அப்பிள்ளைக்குப் பாலருத்தும் சத்தியற்றொழிதல் எங்ஙனம் ? ஒழியினும், அது பெரும்பான்மையதன்றே. கன்றை நினைந்திரங்கும் பசுத் தன்மடிசுரந்து கன்றருந்துங் காட்சியைத் தம் கண்குளிரக் காண்கின்றிலர் போலும்! கொடிய மிருகங்களுந் தம் குட்டிகட்கு

முலைகொடுத்தல் குறித்திலர்போலும்! அந்தோ! ஈதென்ன, கொடுமை! கொடுமை!! "அம்மே அப்பா" என்று அழுத பிள்ளைக் கமுதருத்திய அம்மையப் பரே இவர்க் கறிவு கொளுத்துதல் வேண்டும்.

"சுரந்த திருமுலைக்கே துய்யதிருஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்ல—சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையாள் அன்பிருந்த வாறு"ம்

கேட்டிலர் போலும்! இவர் இங்ஙனமாக, இவர் தம் மக்கள் உடம்பு வளர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும் உடையாராதல் எங்ஙனம் கூடும்? இக்குற்றம் யாரிடத்தது? நம் மக்களுடம்பு தளர்ச்சியுறுதலின்றி வளர்ச்சியுறுதல் வேண்டும் நமக்கு இக்குற்றம்படாது பாதுகாத்திடுதல் நம் கடமையேயன்றோ? அதன் பொருட்டவர் தாய்மாரைப் பேணுதலும் பாதுகாத்தலும் நமது அதி முக்கிய கடமையேயாம். இதனால் நம் மக்கள் திடகாத்திர ராகாமைக்கு நாம் அவரது தாய்ப்பால் விஷயமாகப் போதிய கவனஞ்செலுத்தாமையுங் காரணமாமென்பது காட்டப்பட்டது. இனிப் "பருவத்தே பயிர்செய்" எனவும், "பூப்புறுசெவ்வியீராறுநாளும், பூப்பின்கிழத்தியைப் புணர்தல் வேண்டும்" எனவும், "காலப்பழுதாலும் கற்பிற் பழுதாலும் காயத்திலும் பழுதாங்காண்" எனவும்,

"தன்னுடம்பு தாரமடைக் கலந்தான் றன்னுயிர்க்கென்
றெண்ணித்து வைத்த பொருளோ டிவைநான்கும்
பொன்னினைப் போற்போற்றிக் காத்துய்க்க வுய்க்காக்கால்
மன்னிய வேதந் தரும்"

எனவும் வருதலை நோக்காது, வழங்கலம் வழங்கும் மாரிபோலத் 'தன்னைத்தேறி முன்னையோர் கொடுத்த, நன்மனைக் கிழத்தி யாவெ வக்கிலைச், சாவுழிச் சாதுந்தகைமைய ளாயினு' மேவுழி மேவல் செல்லாது காவலோடு, கொண்டோ னொருத்தி உண்டிவேட்டிருப்ப, என்னுக்கெண்ணெய்போலத் தள்ளாது, பொருளி னளவைக்கு। போகம்விற் றலாறும், அருளின் மடந்தைய ராகந்தோய்ந்து, மாற்றல் செல்லாது வேறோர் மனைவயிற் கற்புடை மடந்தையர் பொற்புநனிகேட்டுப், பிழைவழி பாராது றழைவழி நோக்கியும் இன்னிலை கேடுற்றிழிதொழில் புரிந்தார் வினைகள் முளைத்தலின்றியும். முளைத்தும் வாய்ப்பின்றியும், வாய்த்தும் விளைச்சலின்றியும் இளைத தொழிகின்றன. இப்பிழை அவரிடத்ததோ? அவர்மக களிடத்ததோ? இப்பிழையால் அவருடம்பிடைப்பட்ட நோய்கள் அவர்மக்கட்கும்பற்றுகின்றனவே, அந்தோ! இதனை அப்பெரியோர் கவனித்தொழுக லாகாதா? இதனால் நம்முடம்பிற்கும். நம்மக்களுடம்பிற்கும் நம் மொழுக்கமும் உத்தரவாதியாதல் குறிப்பித்தவாறு.

“பஞ்சத்துக்கு நெஞ்சடைப்பன், படைக்குக் காறு கட்டு, நித்திரைக்குச் சத்துரு, வாய்க்குப்பிள்ளை, வயிற்றுக்கு மாற்றான்” என அறிந்தும் நாம் மக்கட் பேற்றையே விரும்புகின்றோம். ஆனால்,

“நாப்பிளக்கப் பொய்புரைத்து நவநிதியந் தேடி
நலமொன்று மில்லாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வெழுகின்ற புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்

காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர் [டே
சுவட்டேத்தொல் மரத்துக்குட் காலுழுத்துக் கொண்
ஆப்பதனைப் பிடித்தசைத்த குரங்கதனைப் போல
அசைப்பட்டீர் கிடந்துழல அசப்பட்டீர் நீரே''

என்பதற் கிணங்க நமக்கு மக்களைப் பெறத்தெரி யுமேயன்றி வளர்க்கவாவது காக்கவாவது தெரிவ தில்லை; வளர்த்தற்கன்றும் அவரை யாதொரு நோக்கமு மின்றியே சும்மா வளர்த்து விடுகின் றோம். எந்த உபாயத்தாலாவது அவர்கட்குப் பொருள் சேர்த்து வைப்பதே அவர்களைக் காப்ப தென் றெண்ணிவிடுகின்றோம். பொருட்காகவும் பிள்ளைப்பேற்றை விரும்பிப் பெண்டிர் பலரைக்கொள் கின்றோம்; அதனாற் பேய் கொண்டவராகின்றோம். முதற் பிள்ளை வளர்ந்து பால் குடி மாறுவதற்குமுன் அதற்கு இளைய பிள்ளை யொன்றைத் தோற்றுவித்து அம்மூத்த பிள்ளையை விரைவிற் சவலைப்பிள்ளை யாக்கிவிடுகின்றோம். இச்சவலைப் பிள்ளைகட்கும் கூட ஒன்று மறியாப் பருவத்தே, பொம்மைக்கலி யாணஞ் செய்வித்து, அதனைச் செல்வக்கலியாண மென்கின்றோம்; நமக்கு ஒப்பு குட்டிகளும் பல. "தெய்வம் பிள்ளை வளர்க்கும், திண்ணை கால் கழுவும்" என்னும் இவ்வுலக வசனம் நாம் பிள்ளை வளர்க்கும் பெருமையை நாடறியக் காட்டுதற்கேற்ற நல்வசன மாயிருக்கின்றது. "அம்மையோடென்கிறாயா? ஆகட் டும்; அப்பனோடென்கிறாயா? ஆகட்டும், என்கிறாயே." என்னும் இவ்வசனம் நாம் நம் மக்கட்கு உணவு கொடுக்கும் விதத்தை நன்கு புலப்படுத்தும். "வாயறி

யாமற் றின்றல், வயிறறியாமற் கழிதல்" என்னும் இவ்வசனம் நம்மக்கள் உணவுகொள்ளும் விதத்தை ஒருங்கு காட்டும். "நுண்மை நுகரேல்" என்னுஞ் சூத்திரம் நம்மக்கட்கு நாம் சிற்றுண்டி கொடுக்கும் வரலாறும், அவற்றை அவர் மடியிற்கட்டிக்கொண்டு பள்ளிக்கூடத்திற்குச் செல்லும் வரலாறும் செவ்வனே குறிப்பிக்கும். "நோய்க் கிடங்கொடேல்" என்னும் இச்சூத்திரம் நமக்கும், நம் பெண்டிர்க்கும், நம்மக்கட்கும் நோய்க்கிடங்கொடுக்குந் தன்மை உண்டென்னும் வரலாறுணர்த்தும். நம் மக்கட்கு நோயுற்றால், நம்முடைய பெண்டிர்கட்குக் கைப்பக்குவமாய்ப்பிள்ளை வைத்தியஞ் செய்யத் தெரியுமென்றல் அரிதாய்விட்டது. நமக்கும், நம் பெண்டிர்க்கும் நம் மக்கட்கும் முக்கியமாகச் சரீர சுத்தியும் சித்த சுத்தியும் எய்துதற் பொருட்டு அவ்வக்காலத்தே செயற்பாலனவாக விதிக்கப்பட்ட சற்கருமங்களை யெல்லாம நமக்குணர்த்தி விதிமுறையாற் செய்யும் குருமார் இப்பொழுது அருகிக்காண்டலாற் புது நாகரிகம் போற்றிக், கேலியும் நையாண்டியுமாக நமது புத்திசாலித்தனத்தை அவற்றின் மேற்காட்டிப், பையப் பைய அவற்றைக் கைந் நெகிழவிட்டு விட்டோம்; நம் மக்கட்கு அவற்றைப்பற்றி யாரானும் யாதானுமொன்று கூறுமிடத்து, அப்படியொன் றுளதோவென்று, மேற்றிசைத் துரைமாரொப்ப மிக ஆச்சரியப்படுகின்றார்கள்; அம்மட்டோ! அவற்றின் பயன் இதுவென் றுணர்ந்து கொள்ளும் மதுகை நம்மைப்போலவே தமக்கு மின்மையால் அவற்றைத் தாமும் நையாண்டி செய்கின்

ருர்கள். இதற்குக் காரணராவார் நம்மிடத்தே நன்மையினும் தீமையினும் தவவேடராகிய வழிப்பறி பறித்து நம் முன்ஞேராசாரமுறை தெரியாது, அவர் எழுதியும், ஓதியும், உணர்ந்தும், ஒழுகியும் பாதுகாத்து வந்த உண்மை நூல்களையும், அவற்றின் உண்மைகளையும் தாமும் பயின்றறிந் தநுபவியாது, பிறர்க்கும் பயன்படுத்தாது, வயிறேம்புகையும் போக நுகர்ச்சியுமே போற்றிச் சாகமாட்டாமல் வீணுட் கழிக்குங் "கூலித் தொழிலாளர் கொண்டுவிற் போர் போன்ற குருவேலைப் பகடிக" ளாய்க்குழிக் கும் வழிக்கும் வேறுபாடறியாது, தாமும் இடர்ப் பட்டு நம்மையும் அவ்விடர்க்குட்படுத்திக் கவலை யின்றியுழலும் திருட்டுக் குருட்டுக் குருக்கண்மாரே யாவர். அம்மட்டோ! "தன்ஞலே தான் கெட்டால் அண்ணுவி என் செய்வார்" என்பதற் கெடுத்துக் காட்டாதற் கியைந்துள்ள நாமும் அவர் சிஷ்யரே யாதற்குத் தக்கவர்களாயிருக்கின்ருேம். ஐயையோ இவர்க்கும் நமக்கும் மென்செய்யலாம்? இது நிற்க.

நமது தேசத்திலே, அதிலும் நமது பட்டணங் களிலே, சுகாதாரக் குறைவு மிகுதியாயிருக்கின்றது. பட்டணங்களிலுள்ள பிரஜைகளின் நெருக்க மிகுதி யும் அதற்கேதுவாகின்றது; அம்மட்டோ! நம்மவர் கள் நல்லுணவு, நன்னீர், நற்காற்று என்னும் இவற்ற தியல்புகளை நன்கறிந்தொழுகாமையும் அதற் கேது வாகின்றது; அறிந்திருப்பினும் நாம் அவைபற்றிக் கடைப்பிடித்தொழுகும் அந்த பரம்பரை நியாயமும் அதற்கேதுவாகின்றது. நமக்கிருக்கும் சுகாதார

வுணர்ச்சியி னளவை நம்முடைய வீட்டிலும், புறக்கடையிலும், அவற்றைச் சார்ந்த விடங்களிலும், நம் நகரத் தெருக்களிலும், குளங்களிலும், வாய்க்கால்களிலும், ஆறுகளிலும், பாறைகளிலும், ஆற்றங்கரைகளிலும், வயல்களிலும், தோப்புகளிலும் இன்னும் பற்பல இடங்களிலும் கண்கூடாகக் கண்டுகொள்ளலாம். இச்சுகாதாரக் குறைவால் நாடும் நம்மக்களும் அடிக்கடி சுரநோய்க்கும், தொற்றுநோய்க்கும், கொள்ளைநோய்க்கும் ஆட்படுகின்றோம். சுகாதார நிலையைக் கவனித்தொழுகுங் கவலையை நம்மிடத்தே தானே நம் துரைத்தனத்தார் ஒப்பிக்கவும் நாம் அதனை மிகவும் அசட்டை செய்து, நம்மை அதற்குத் தகுதியற்றவரெனக் காட்டிக்கொள்கின்றோம். நாம் நாட்டுப்புறத்தாரையும் அவர் மக்களையும் பார்த்துப் பொறுமைப்படுதலாற் பயனென்? சில வேளை நம்முடைய துராசாரங்கள் அல்லது துர்வழக்கங்கள் அந் நாட்டுப்புறத்தாரையும் அவர் மக்களையும் போய்ப் பற்றிப் பார்க்கின்றன. இதற்குக் காரணம் அவர் பட்டணத்து மாந்தருடன் பழகுவதேயாம்.

நம்மக்கள் இக்காலத்திலே மிகவும் அதிபாலியத்திலேயே கல்வி கற்கத் தொடங்கிவிடுகின்றார்கள். முற்காலத்திலே அவர்கட்கு விளையாட்டுப்பருவமென்றெண்ணப்பட்டிருந்த பருவமுழுதும் இப்பொழுது கல்வி கற்றலிலேயே கழிக்கப்படுகின்றது. கல்லூரியிலே, நம்மக்கட்கு விளையாட்டிற்கென விடப்படும் காலம் மிகவும் சொற்பம். அது அவர்கட்கு விளையாட்டு அத்தியாவசியகம் என்பதை மாத்திரம் காட்

டிக்கொண்டிருக்கின்றது. ஆகவே, அவ்விளையாட்டினால் அவர்களடையும் பயன் மிகவும் சொற்பமேயாம். அதனை நாமும் கவனிப்பதில்லை; நம்மக்களும் அதிகமாய்க் கவனிப்பதில்லை. வித்தியாவிசாரணைத் தலைவர்கள் மாத்திரம இயன்றவளவிற் கவனித்து வருகின்றனர். "பழைய விளையாட்டு ஒன்றையும் இப்பொழுது காணோமே" என முதியோர் சொல்ல யாம் கேட்டிருக்கின்றோம். ஆனால் இப்பொழுதுள்ள விளையாட்டுகள் நோக்கமும் முறையும்பற்றி நிகழ்வனவாம். இவற்றை விதிப்படி விருப்புடன் பயில்வார்க்கு மிக்க பயன் விளைப்பனவாம்.

காற்றென்றும், வெயிலென்றும், மழையென்றும் பாராமற் காடுமேடுமா யலைந்து, கொழுமைமிக்க புற்கையேனும் விலாப்புடைக்க வுண்டு "நொறுங்கத் தின்றால நூறு வயசு" என்று கூறி, நெடுநாள் வாழ்க்கையுடையனும் பட்டிக்காட்டானுக்கும், கல்லைத் தின்று கல்லுமற்றுப் போகுங் காலத்திலுங் கூட "வெந்நீர் பொருதெனுடல் காலின் முட்டைக்கவும் வெடுக்கென் றசைத்தெடுத்தால் விழியிமைத் தன்னனே தண்ணருளே நாடுவேன்" என்னும் பட்டணத்தவருக்குப் சரீர விஷயமாய் எவ்வளவோ வித்தியாசமிருக்கின்றது. பட்டணத்தான் பார்த்தாற் பட்டிக்காட்டானுடம்பிற் கண்ணெணச்சிறப்புடும் போலும், ஆயினும் படுவதில்லை.

கல்லூரிகளிலே, எம்மநுபவத்திற் கண்டவளவிற் பெரும்பாலும் பட்டிக்காட்டுப் பிள்ளைகளே உறுதியாய் நின்றுழைத்துப் பரீக்ஷைகளிலே வெற்றி

பெறுகின்றார்கள்; அவர்களே பட்டணத்துப்பிள்ளை களை நோக்க நல்லறிவும், நல்லொழுக்கமும், நன்றி யறிவும், ஈசுரபத்தியுமுடையவராகின்றார்கள்; அவர்கள் கல்வியே நெடுநாள் நிலைநின்று, அவர்க்கும் பிறர்க்கும் உபகாரப்படுகின்றது. அவர்களை நன்கு கவனித்தால் நம் உலகிற்கு நன்கு பயன் படுவார்கள். இது நிற்க,

நம் செல்வப்பிள்ளைகள் நம்மால் மிகவும் செல் வம் கொடுக்கப் பெறுகின்றார்கள். அதனால் அவர் கள் முறுக்கிவளர்க்காத மீசைபோலத் தம் வரம்பு மீறி நடந்து அந்தோ! வறிதே கெடுகின்றார்கள். அவர் தம் உடம்பு விஷயமாயும் உணவு விஷயமாக வும் கவனம் செலுத்தி அவற்றை வரம்புமீறாது சாவ தானமாகப் பாதுகாத்துக் கொள்வதில்லை; அதனால் அவர்களிற் பலர் வியபிசாரம், கட்குடி, புலாலுண் டல் முதலிய தீயொழுக்கந் தழுவிச்சோம்பித், தூர்த் தராய்க், கெட்டலைகின்றார்கள். அவர் அநாகரிகமாய செயல்களை யெல்லாம் நாகரிகமெனக் கைக்கொள் கின்றார்கள்; தம் தாதை மூதாதைகள் தேடிவைத்த திரவிய மனைத்தையும் வீண் விரயஞ் செய்து விரை விலே ஒட்டாண்டிகளாய் விடுகின்றார்கள். இவர்களிற் சிலர் அவர்கட்கு சிராத்தந்தானும் செய்யாதொழி கின்றனர்; இவரை இவ்வாறு வளர்த்துவிட்ட இவர் தாதைகட்கு இவராற் கிடைக்கும் பயன் என்னையோ யா மறிகிற்கிலம்! இவருடம்பு விரைவிற் றீக்கிரையா தலையுடைத்து. 'அறுநான்கின்படி யிளமைநல்லியாண்' டெனக் குறித்தருளிய இளமைப் பருவத்தின் எல் லையை இக்காலத்து முதுமைப் பருவந்தானும் அடை

இன்றிலதே! இதற்கெல்லாம் காரணராவார் யாவர்? நாமோ நம்மக்களோ? இதனால், நம்மக்களுடம்பின் கேட்டிற்குக் காரணம் நமக் கவர்களை வளர்க்கத் தெரியாமையும், நாம் நம் முன்னோராசாரம் கைவிட்டமையும், நாம் வாழுமிடத்தின் சுகாதாரக்குறைவும், நம்மக்களின் அதிபாலியக் கல்வியும், நாம் அவர்கட்குச்செலவங்கொடுத்தலும் என வரும் இவையும் இவைபோல்வனவுமே காரணமா மென்பது குறிக்கப்பட்டது.

## உடம்பின் அருமை.

பொருட்டன்மையால் உடம்பும் வேறு, உயிரும் வேறு; அவையே கலப்பினால் ஒன்றும். ஆகவே உடம்பை உயிராக வைத்துப் பேணுதல் வேண்டும். உடம்புண்டது உயிருண்டதே அன்றோ? உடம்பைப் பேணுதவன் உயிரைப் பேணுதவனே ஆகின்றான். உடம்பு போயிற் றென்னுது "உயிர போயிற்" றென்பர் உலகர். "உடம்பு பிரிவுயிர் சாதலுனே" எனவும் "ஊண் வெறுத்திடில் உயிர் வெறுத்திடல் ஒக்கும்" எனவும் கூறுவர் பெரியோர். உடம்பறியான் உயிரறியான். உயிரறியாதவன் உயிர்க்குயிராகிய ஒருவனை அறியான். உடம்பறியானெனின் வேறு எதனைத்தான் அறிவான்? உடம்பிழந்தவன் வேறு எதனைத்தான் இழவான்?

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே."

என்பர் திருமூலநாயனார். ['ஆர்' விகுதிக ளிரண்டும் உயர்வுபற்றியே வந்தன.] இங்கும் உடம்பழிதலை

உயிரழிவதாகக் கூறியருளுதல் கண்டுகொள்க. உயிரை நோக்கி உடம்பு அதனோடு சமமாக வைத்து உபசரிக்கப்படுகின்றது. இவ்வுண்மை உணரமாட்டாதார் உடம்பை வறிதே இகழ்தலொன்றே செய்வர். ஐயோ! அவர் அவ்வுயிர்க்கு என்கடவர்? உடம்பை இகழ்ந்தவன் உயிரை இகழ்ந்தவனே ஆகின்றான்; அதனால் அவன் உயிர்க்குயிராகிய அவ்வொருவனையும் இகழ்ந்தவன் ஆகின்றான். உடம்பினாற் பெறும் பேறறியாதவன் அவ்வுடம்பினை இகழ்வான். உடம்பினை இகழ்வான் வேறு எதனைத்தான் இகழான்?

உடம்பு உயிர்க்குக் கோயிலாம். உயிர் உயிர்க்குயிராகிய பரமர்க்குக் கோயிலாம். ஆயின், உடம்பும் அப்பரமர்க்குக் கோயிலாகாது மற்றென்னாகும்? ஆதலால் உடம்பும் பரமபதியாகிய நம்பிறைவரது திருக்கோயிலே யன்றோ? அதனை இகழ்வார்க்கு வரும் புகழ் என்னையோ யாம் அறிகிலம்!

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே."

என்பர் திருமூலநாயனார். "காயமே கோயிலாக" என்றோதுவர் எம்மை ஆளுடையஅரசுகள். இவ்விரண்டு திருவாக்குக்களாலும் உடம்பைப் பேணுதல் அவ்வுடம்பைக் கொடுத்த கடவுளைப் பேணுதலாகவே முடியும் அன்றோ? இங்ஙனமாகவும் சிலர் உடம்பை இகழ்ந்துரைப்ப தென்னை? அவ்வாறு இகழ்ந்துரைப்பார்க்கு அவ்வுடம்பை வைத்துக்கொண்டிருத்தல்

இழுக்கையன்றோ ? அங்ஙனம் இகழ்ந்துரைத்தற்கு அவர்கொண்ட கருவியாகிய வாயும் அவ்வுடம்பின் கூறேயன்றோ ?

உயிர்க்கிடமாகிய உடம்பு உடம்பிருத்தற் கிடமாகிய உலகம்போலும். உயிரின் பொருட்டு உடம்பிருப்பதாயின், உடம்பின் பொருட்டே உலகமும் இருக்கின்றது. உடம்பு உயிராற் சங்கமம்; உடம்பை நோக்கி உலகம் தாவரம். ஒற்றுமை நயநோக்கி உடம்பும் உலகமும் ஒன்றெனவே கொள்ளப்படும். "அலைந் திடு மண்ட பிண்ட மவைசமம்" என்பது கோயிற் புராணம். ஆகவே உடம்பை இகழ்ந்தவன் உலகத்தையும் இகழ்ந்தவனே யன்றோ ? அவனுக்கு உலகத்தில் என்ன வேலை ? உலகத்தின் அமைதியையும் உடம்பின் அமைதியையும் உற்றுணரவல்லார்க்கு, அவையிரண்டும் தம்மைப் படைத்தருளிய முதல்வனது திருவருட்டிறத்தைமிகவெடுத்துரைப்பனவாம். அருட்பே றுகப்பார்க்கு அவற்றுள் எதனையாவது இகழ்தற்கு மனம் வருமா ? துணியுமா? இகழின் அவர் "உலகமும் பல்லுயிரும் ஒன்றி நிறைந் தோங்கி யிலகுஞ் சிவனை" எங்ஙனம் அறிந்து வழிபடுவர் ? அவனும் அவர்க்கு எவ்வாறு அருள் செய்வன்?

உடம்பின் வேறாக உயிரென்பதொன் றுளதெனக் கொள்ளார்க்கு அவ்வுடம்பின் உறுதிநிலை பிறழாமையே உயிராம். ஆகவே, அவர் அவ்வுடம்பின் உறுதிநிலை பிறழாமையே வேண்டுபவராய் அதனைக் கடைபோகக் காத்துய்க்க வல்லராவர். அவ்விரண்டையும் வேறென்றுணர வல்லார் அவற்றுள்

உயிரொன்றையே பேணுதுமெனக் கூறி, அவ்வுயிர்க்கு நிலைக்களமாகிய உடம்பைப் பேணுது இகழ்தலும் செய்வராயின், அவர் தாம்பெற்ற அவ்வுடம்பைக் கடைபோகக் காத்துய்க்கும்வலி யிழந்தவராவர்; அதனால் அவர் தம் உடம்பையும் விரைவிலே இழந்து, அவ்வுடம்பாற் கொள்ளத் தகும் பயனையும் அவ் வாறே இழந்துவிடுகின்றனர். இவ்விழவு வீணிழவே யன்றோ? உடம்பும் உயிரும் ஒன்றெனக்கொள்வார தறியாமையினும் அவ்விரண்டும் வேறெனக்கொள்ளும் இவரது அறிவுடைமைக்கே மிகவும் அஞ்சுகின்றோம்?

பரகாயப் பிரவேசஞ் செய்யும் ஆற்றலுடைய ராய், உயிரை உடம்பிற்கு அந்நியமாகக் காணும் சிவயோகிகளும் "உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே, உடம்பைவளர்த்தேன் உயிர்வளர்த்தேன்" என்று அருளிச்செய்வராயின், உடம்பை உபேக்ஷை பண்ணுதற்கு நாம் யார்?

உயிர்க்கு ஒழுக்கமே விழுப்பம் தருகின்றது. ஆத லால் ஒழுக்கம் உயிர்க்கு நிலைக்களம் அல்லது அடிப் படை ஆகின்றது. விதிவிலக் குணர்ந்தே ஒழுக்கம் நிகழ்கின்றது. ஆதலின் உணர்வே ஒழுக்கத்திற்குக் காரணம் அல்லது அடிப்படை ஆகின்றது. உணர்வும் உடம்பால் நிலைபெறுகின்றது. ஆதலின் உடம்பே இவை அனைத்திற்கும் அடிப்படை ஆகின்றது. ஆயின், இத்தகைய உடம்பை நாம் எத்தனையாக மதித்து நடத்தல்வேண்டும்!

உடம்பு நிலைகுலையுமாயின், உணர்வும் நிலைகுலை யும். உணர்வு நிலைகுலையுமாயின், ஒழுக்கமும் நிலைகுலை

யும். ஒழுக்கம் நிலைகுலையுமாயின், உயிர் நிலைகுலைதல் சொல்லவும் வேண்டுமோ? உடம்பு நிலைகுலைதல் இவ் வனைத்தும் நிலைகுலைதலாக வன்றோ முடிகின்றது !!

உடம்பால் முதற்கண் உணர்வு காக்கப்படுகின்றது. அதன் பின்னரே, உணர்வு தன்னையும் அவ் வுடம்பையும் காத்து, அதனினும் மேலாகின்றது. உணர்வால் முதற்கண் ஒழுக்கம் காக்கப்படுகின்றது. அதன் பின்பே, ஒழுக்கம் அவ்வுணர்வையும் உடம்பையும் காத்து, அவற்றினும் மேலாகின்றது. ஒழுக்கம் உயிர்க்கு விழுப்பம் தந்து அதனை எப்பொழுதும் காக்கின்றது. அதனாலேயே உயிர் உயிர்த்தன்மை எய்தி, இவ்வனைத்தையும் இயக்கிக்காத்து, எப்பொழுதும் இவ்வனைத்திற்கும் மேலாகின்றது. இம்மேன்மையெல்லாம் இறுதியில் உயிரின் மேன்மையாகவே மதிக்கப்பட்டு, அதனால் உயிர் இன்புறுகின்றது. இதற்கெல்லாம் காரணம் இவ்வுடம்பே யன்றோ? இதன் மேம்பாடறிவான் தன் மேம்பாடறிவான்; அதனால் அதனை அடைவான்.

உடம்பை உடம்பின் பொருட்டே வேண்டுவர் உணர்வில்லார். உணர்வுடையார் உடம்பை உணர்வின் பொருட்டே வேண்டுவர். உணர்வை உணர்வின் பொருட்டே வேண்டுவர் முன்னின்ற உடம்பும் மேல்வரும் ஒழுக்கமும் உணரார். அவ்விரண்டும் உணர்வார் அதனை அவ்விரண்டன்பொருட்டும் வேண்டுவர். ஒழுக்கத்தை ஒழுக்கத்தின் பொருட்டே வேண்டுவர் முன்னின்ற உடம்பும் உணர்வும், மேல்வரும் உயிரும் உணரார். உணர்ந்தார் அதனை அம்மூன்றன்

பொருட்டும் வேண்டுவர். உயிரையும் உயிரின் பொருட்டே வேண்டுவர் உயிர்க்குயிராய்த் தோன்றாத் துணையாய்த் தமக்கு இவற்றை யெல்லாம் தந்து தம்மையும் இவற்றையும் காத்துய்த்துத் தமக்குத் தம்மினும் இனியனாய்த் தம்முளே நிற்கும் தம் தலைவனை உணரார். உணர்ந்தார் அவனையே உணர்ந்து, அவன் வசப்பட்டுத், தம்மையும் தமக்குள்ளவற்றையும் அவன் உடைமையாகவே கண்டு, அவனிடத்தே ஒப்புவித்து, அவனருளே துணையாக அவ்விறை பணியிலே நிற்பர். அவ்விறைபணிக் குரிய இவ்வுடம்பு எத்துணை மேம்பாடுடையது, அந்தோ!

இறைபணி நில்லார்க் குளவாகிய உடம்பு முதலியன ஏனை விலங்கு முதலியவற்றிற் குளவாகிய அவற்றின் வேறுபடுமாயின், அவ்வேறுபாடு முயற்கோடொக்கும்போலும், விலங்கு முதலியவற்றிற் குளவாம் அவை இறைபணி நிற்றற் குபகாரப்படுமாயின், அவற்றை உடைய அவ்விலங்கு முதலிய வாதற்கே ஆசைப்படுவர் அறிஞர். யானை முதல் எறும்பீறாக இறையருள்பெற்ற ஏனை உயிர்களும் உளவாதல் கதையிலே கேட்கப்படுகின்றது. இறைபணியின் பொருட்டுப் புலிக்கால் வேண்டிப் பெற்றாரும் உளர். சிலம்பியும் திருவருள் பெற்றுய்யுமாயின் அது பெறாத மனித உடம்பாற் பயனென்? தோன்றா முற்கதை பொய்யென்று சொல்லி, அவ்வளவிலே தம்மைத் தாமே மதித்து, மகிழ்ந்துகொள்வார்க்கு யாம் இது கூறுவின்றிலம். மனித உடம்பிற்போலப் பகுத்துணர்ச்சியென ஒன்று ஏனை உடம்புகளினும் அவ்வவ்வுடம்பின்

இயல்பிற் கியைய உளதாதலும் கண்டு அநுபவிக்கப் படும் போதும். அதனைச் சுவபாவ வுணர்ச்சியெனக் கொள்வாரும், சாதிப்பாரும் உளர். அவர் அவ்வுடம்புகட்கு வேறாய் ஆன்மாக்கள் உளவென்று கொள்ளாமையின், அவர்க்கு அஃதெவ்வாறாயினும் ஆகுக. இராமனடியாற் சிலையு மடமங்கை யாதலும், உமாபதி சிவத்தால் முள்ளிச் செடியும் முத்தி பெறுதலும் ஆகிய இவையெல்லாம் திருவருட் கண்கொண்டு நன்காராயத் தகுவனவாம். "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென் மனத்தே வழுவா திருக்க வரந்தர வேண்டும்" என்றும தமிழ் வேதம். ஆயினும் ஏனை உடம்புகள் இறையருள் பெறுதற்குச் சாதனமாதல் ஏகதேசமாகவும், இம்மனித வுடம்பு அவ்வாறாதல் பிரசித்த மாகவும் கேட்கப்படுகின்றமையின், இம்மனித உடம்பே மிக மேம்பாடுடைத்தாதலை அறிஞர் வேண்டுவர். இம்மனித உடம்பும் இறைபணி நிற்றற் குபகாரப்படா தொழியுமாயின் இதற்கும் ஏனை உடம்புகட்கும் வேறுபாடு ஒரு சிறிதும் யாம் காண்கின்றிலம்! அம்மட்டோ, இம்மனித வுடம்பு பெற்ற உயிரே தவறு பெரிதுடைத்தாம்!!

இனி இம் மனித உடம்பின் அமைந்த உறுப்புக்களிற் பல இறைபணிக் குபகாரமாயிருத்தல் நன்கு கருதப்படும். அவ்வுண்மை எம்மை ஆளுடைய அரசுகள் அருளிச்செய்த 'திருவங்கமாலை'யின் வைத்துய்த்துணர்ந்து கொள்ளவும்படும். அங்ஙனம் கருதி உய்த்துணராதார் மனிதப்பிறவியின் பயனுணராதவரே யாவர்.

" மானிடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காய
மானிடத் தைந்து மாடு மரன்பணிக் காகவன்றோ
வானிடத்தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச்சிப்பர்
ஊனெடுத் துழலுமூமர் ஒன்றையு முணரார் அந்தோ"

என வரும் சிவஞானசித்தித் திருவிருத்தத் தானும் அஃதினிதுணர்ந்து கொள்ளப்படும்.

புத்தேளுலகு பெரிதும் போகநுகர்ச்சிக்கே பொருந்தி நிற்பது. புத்தேளிர் சரீரமும் அது. நரகம் பெரிதும் துன்பமே நல்குவது. நரகர் சரீரமும் அது. இவ் விருதிறத்திலும் படாது இடை நிகர்த்தது போலும் இவ்வுலகு. இவ்வுலகர் சரீரமும் அது.

இன்பம் மிகினும் துன்பம் மிகினும் நல்வினை செய்தற்கண் உள்ளம் கிளர்தலும் அறிவுசேறலும் இல்லை. என்னை? இன்ப மிகுதி நிலையாமையை மறப்பிக்கும். துன்ப மிகுதி நம்பிக்கையைத் துறப்பிக்கும். இன்ப துன்பங்கள் இடைநிகர விருந்தாலே நல்வினை நிகழ்தற் கேதுவாம்.

நல்வினைப் பயனும் தீவினைப் பயனும் இடைநிகர நுகரும் இடம் இவ்வுலகேயாம்; அதற்கேற்ற கருவியும் இச்சரீரமே யாம். இதனாலன்றோ, நல்வினை இன்பந் தருதலையும் தீவினை துன்பந் தருதலையும் வகுத்துணர்தற்கும், அவற்றுள் நல்வினையைக் கொள்ளுதற்கும் தீவினையைத் தள்ளுதற்கும் ஏதுவாயிற்று; இதுபற்றியே யன்றோ, இப்பூமி கன்மபூமி எனப்படுவதும்? கன்மபூமி நாற்றங்காலையும் ஏனை உலகங்கள் விளைபுலத்தையும் ஒக்கும்.

இக் கன்மபூமியுள்ளும் வினைபுலமொக்கும் நிலங்களும் உள. அவை முற்கூறிய போகபூமியைப் போலவே நித்தியாநித்திய விவேகம் நிகழ்தற்குத் தடையாயிருப்பனவாம். ஆதலின் அவற்றையொழித் தெஞ்சிநின்ற நிலமே கன்மபூமி எனப்படும்.

கன்மங்களும் விதிவிலக்குணர்ந்தே இயற்றப்படுவன. அவற்றைப் போதிப்பன பல. அவற்றின் வேத சிவாகமங்களே மிகச் சிறந்தன. அவ்வேதசிவாகமங்கள் வழங்குதற்கிடமாகிய நிலமே சற்கன்ம சாதனமா யிருப்பதொன்றும். அந்நிலம் புண்யபூமியாகிய இப்பரதகண்டமே யன்றோ? ஆகலின இப்பரத கண்டத்திலே பிறக்கப்பெறும பாக்கியமே பாக்கியம் எனப்பெறும்.

இப்பரதகண்டத்திலே பற்பல ஜாதிகள் உள. அவையெல்லாம் கன்மபேதம் பற்றிப்பாரம்பரியமாய் நிகழ்ந்து வருவன. அவற்றிற் பரமபதியாகியசிவபெருமானை நோக்கித் தவஞ் செய்யப் பெறும உரிமையும் தகுதியும் வாய்க்கப்பெறாத ஜாதிகளும் பல உள. ஆகலின் அவற்றை ஒழித்து அத்தவஞ்செய் சாதிகளிலே பிறக்கப் பெறுதல மிக அருமை. பெறினும் சற்சமயமாகிய சைவ சமயத்தினீங்கிப் பரசமயப் பிரவேசஞ்செய்திடாமை மிகவும் அருமையாம். இவ்வுண்மை

"நார்பயிரேயக்தன்னி னுண்மறை பயிலா நாட்டில்,
விரவுதலொழிந்து தோன்றல் மிக்க புண்ணியர்தாமும்,
தரைதனிற் கீழ்விட்டுத் தவஞ்செய் சாதியினில் வந்து,
பரசமயங்கட் செல்லாப் பாக்கியம் பண்ணொணாதே."

என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தான் இனி துணர்ந்துகொள்ளப்படும்.

காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலிற் பிறவி, பெருங்கடல்போலும். அன்றியும்,

“நிலத்திடைப் பொறையா யுவாவினி னீண்டு
சொலத்தகு பெருமைத் தூரா வாக்கை
மெய்வளி யையொடு பித்தொன் றாக
வலவனை நெடுங்காற் றாகுட னடிப்ப
நரையெனு நுரையே நாடொறும் வெளுப்பத்
திரையுடைத் தோலே செழுந்திரை யாகக்
கூடிய குருதி நீரினு ணிறைந்
மூடிய விரும லோசையின் முழங்கிச்
சுடுபசி வெகுளிச் சுறவின மெறியக்
குடரெனு மரவக் கூட்டம்வந் தொலிப்ப
வூன்றசை யெலும்பி னுட்டிட லடைந்து
தோன்றிய பல்பிணிப் பின்னகஞ் சுழலக்
கால்கையி னரம்பே கண்ட மாக
மேதகு நிணமே மெய்ச்சா லாக
புழுக்குடைத் துளையே முகங்க ளாக
வழுக்குடை மூக்கா றேதம்வந் தொலிப்ப
விப்பரி செயற்றிய வுடலிருங் கடல்”—

என வருதலின் இவ்வுடலும், ஓர் கடல்போலும். இதுவே இன்னும், கூர்ந்துநோக்கின்,

“அறிவி லொழுக்கமும் பிறிதுபடு பொய்யுஞ்
செம்பிணித் தொகையு மிடும்பை யீட்டமு
மினையன பலசரக் கேற்றி வினையெனுந்
தொன்மீ காம னுய்ப்ப வந்திலக்

கருவெனு நெடோக ரொருதுறை நீத்தத்துப்
புலனெனுங் கோண்மீ னலமந்து தொடரப்
பிறப்பெனும் பெருங்கட லுறப்புகுந் தலைக்குந்
துயர்த்திரை யுவட்டிற் பெயர்ப்பிட மயர்த்துக்
குடும்ப மென்னு நெடுங்கல் வீழ்த்து
நிறையெனுங் கூம்பு முரிந்து குறையா
வுணர்வெனு நெடும்பாய கீறிப்[புணரு
மாயப பெயர்ப்பலி காயச் சிறைக்கலங்
கலங்குபு கவிழா முன்ன மலங்கண்
மதியுட னணிந்த பொதியவிழ் சடிலத்துப்
பையர வணிந்த தெய்வ நாயக
தொல்லெயி லுடைத்த தில்லை காவல
வம்பலர் தும்பை யம்பல வாணநின்
னருளெனு நலத்தார் பூட்டிய
திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே"

என்றருளுதலின், ஒருவகையால் அக்கடல் கடக்குங் கப்பலும்போலும். என்னை? சிவபுண்ணியமும், இருவினை யொப்பும், மலபரிபாகமும், சத்திநிபாதமும், குருவருளும், ஞானசாதனமும், மும்மல நீக்கமும், வாதனை நீக்கமும், ஞானப்பெருக்கமும், முறையே பெற்றுத், தெய்வத்திருவருள் கைவந்து கிடைப்ப, உய்திகூடப்பெறும் உயிரின் பெரும் பேற்றிற்கெல்லாம், வெளிப்படத்தோன்றாது அடிப்படையாய் நின்ற அதிமுக்கிய காரணம் இவ்வுடம்பேயன்றோ?

சொல்லியும், கருதியும், மறுதலையின்மைத்தும் தன் அவத்தையியலபுய்த்துணர்ந்து தன்னின் அவற்றின் வேறாகவறியும் உயிர்க்கு அவ்வுணர்ச்சிதானும் இவ்வுடம்பின்றி எங்ஙனமமையும்?

பசுத்துவமாத்திரையாற் கேவலப்பட்டு நிற்கு முயிர் காரணமுதலிய வைவகைச்சரீரங்களை பொருந் தாவிடின், அதனறிவிச்சை செயல்கள் விளங்குதலும் வியாபரித்தலும் எங்ஙனம்? ஆகலின் வீடுபே றெய்து தற்குரிய நம்மனோர்க்கு இவ்வுடம்பின்றி அமையா மையும், இதனருமையும் நன்குணரத் தகுவனவாம். ஆடையி னழுக்ககற்றகலுறுவார் அது செய்தற் கருவி யாய் அதனோடொத்த உவரெனப்பெயரிய பிறிதோ ரழுக்கை அழுக்கென்றிகழாது அதனாற் பயன் கொண்ட பின்னரே அவ்விரண்டையும் கைவிடுவர். அதுபோலவே உடம்பென்னுமச் சுமைபோட வேண்டு வார் அச் சுமைகொண்டே அது செய்யும்படி ததாய் நிற்றலின் அச்சுமையெடுத் தாடாமலும், களியா மலும் அதனைப்பயன் படுத்திக் கொண்டபின் அதனைக் கைவிடுவர். இங்ஙனமன்றி, அதனை இகழ்தல் மாத் திரையி னிகழ்வார் எங்ஙனம் உய்வர்?

இன்னும், சிவயோகிகள் இவ்வுடம்பை வேறெத் தனைவிதமாகவோ பயன்படுத்திக் கொள்கின்றனரே! "சமாதியான் மலங்கள் வாட்டிப் பொருந்திய தேச கால வியல்பகல் பொருள்களெல்லாம் இருந்துணர் கின்ற ஞானம்." இவ்வுடம்பின்றி அவர்க்கெங்ஙனம் அமையும்? இவ்வுடம்பினுள்ள வற்றை உலகினும், உலகினுள்ளவற்றை இவ்வுடம்பினுங் காணும் அவ்வற் புதக்காட்சி, இவ்வுடம்பில்லையாயின் அவர்க் கெப் படிக் கிடைக்கும்?

இவ்வுடம்பில்லையாயின் மக்களுயிர்க்கு அன்பும், ஆர்வமும், நண்பும், அருளும், ஒழுக்கமும், விழுப்ப

மும், என்றித் தொடக்கத்தனவெல்லாம் எங்ஙனம் அமையும்? அன்பும், அறிவும, இன்பும், எழிலும் என்றித் தொடக்கதகன பயிற்றுதற்கு அம்மம்ம இவ் வுடம்பு, ஓர் பெருங் கல்லூரிபோலும்! நாமும் நம் மக்களும் இவ்வுடம்பினின்றே பயின்று கொள்ளத் தகுவன இன்னோரன்ன பலப்பல உளவாம். ஆயி னும் அவை பயிலுதற்கட் காலவிளம் பிதமாதல் கூடாது; விரைவிற் பயிறலே தகுதி. என்னை? இவ் வுடம்பு நெடுங்காலம் பயிறல் அரிதாகலின். இவ் வுடம்பு தன்னை வேறறிய நிற்கும் உயிர்க்குவினைப்பய னூட்டற்கட் டன்னை வேறறியலொட்டாது தடுக்குந் தடையாய்நின்றே அவ்வினைப பயன்றுய்த்துக் கழிந்த விடத்துங், கழியாநின்றவிடத்தும் தனது நிலையாமை யையும், அதனது நிலையுதற்றன்மையையும் இறப் பானும் பிறப்பானும் பருவமாறுதலானும் காட்டி விடுத்து விளக்குதற்கண் ஓர் விளக்குப்போல்கின் றது. இஃதொன்றிருக்கும்பொழுதே, தம்மைத் தலைவனெனத் தருக்கித் தலைகொழுத்தலையும் உயிர் களும் உளவே! இஃதொன்றிலதாயின் அவ்வுயிர்கள் இன்னும் என்படா? அந்தோ! இவ்வுடம்பின்றன்மை இதுவாயின், இன்னே நன்னெறிக்கு நன்குவிரைதலே நன்றும். வேறுவினைக்குப் போதில்லை,

"கருவினு ளழிவ தாயுங் கழிந்திடா தழிவ தாயும்
பரிணமித் தழிவ தாயும் பாலரு யழிவ தாயும்
தருணரு யழிவ தாயும் தானரைத் தழிவ தாயும்
அருவமே யழிவே யாரு முள்ள போதேபா ருய்ய."

"வேண்டிய நாள்களிற் பாதியுங் கங்குன் மிருமவற்று
ளீண்டிய வெநோய் முதலது பிள்ளைமை மேலதுமூப்
பாண்டின வசசம் வெகுளி யவாவழுக் காறிங்ஙனே
மாண்டன சேர்தும் வளர்புன் சடைமுக்கண் மாய
[ளையே."

என்றருளியதும் இக்கருத்துப்பற்றியே யன்றோ? அறிஞர்கள் "இப்பிறவிதப்பினு லெப்பிறவி வாய்க்குமோ? ஏது வருமோ?" என்று அஞ்சுகின்றனர். நாமோ 'இகமும் பரமு மில்லையென்று பயமின்றொழுகிப் பட்டிமை பயிற்' றுகின்றோம், ஆதலின் நம் மக்களும் அது. இங்ஙனமாகலின், நமக்கிறைவனாற் கொடுக்கப்பட்ட இவ்வுடம்பையும் இஃதிருக்குங் காலத்தையும் நாம் இகழ்வதே செய்கின்றோம்; இன்னும் இதுவே செய்யின் இது தன்பயனைத் தப்பாது பயக்கும் என்றுணர்ந்து கொள்ளபபடும்; அப்பொழுதே இவ்வுடம்பின் அருமை நமக்கு நன்குவிளங்கும் போலும்!

உடம்பின் அருமை கூறத் தொடங்கி, அதனை ஒரு சிறிதே விரித்துரைக்கப்பட்டது. இஃதமையும்.

இனி, இங்ஙனம் ஒரு வகையால் அதனருமையுணர்ந்து கொண்ட நாம், நம்முயிர்க்கும் நம் மக்களுயிர்க்கும் உறுதி பயப்பனவாகிய கருமங்களையே முழுவதுஞ்செய்ய முயறல் வேண்டுமென்பது முன்னரே குறித்தாம். ஆயினும் அவ்வாறு செய்வதற்கு இவ்வுடம்பி னுறுதியும் ஒருதலையாக வேண்டப்படுதலின், நம்முடம்பையும் நம் மக்களுடம்பையும் நன்கு கவனித் தவற்றைப் பாதுகாத்திடுதல் நந்தங் கடமையாம்.

அங்ஙனம் பாதுகாக்கு மிடத்து, அவ்வாறு செய்வ தெதன்பொருட்டென்பதும் நமது ஞாபகத்தில், எப்பொழுதும் இடையீடின்றி இருத்தல் வேண்டும். அவ்வாறு ஓர் அதி முக்கிய நோக்கமின்றி இவ்வுடம்பை இவ்வுடம்பின்பொருட்டே வளர்த்து விடுவோமாயின், இவ்வுடம்பு திண்ணிய வுடம்பாகுமேயன்றிப் புண்ணியவுடம்பாத லில்லை; அம்மட்டோ! இவ்வுடம்பை வளர்க்கும் நமக்கும் நம்மக்கட்கும், இதனை வளர்க்கு நோக்கமே எப்பொழுதும் இடையீடின்றி நிகழினும், அஃது அதற்குமாறாகப், படிமுறையாற்றான் தெய்வத்தாற்றான், தானே தளர்ந்து வீழ்ந்தொழியு மியல்பிற்றாகலின், அந்நோக்கம் நிறைவெய்துதலும் இல்லை; அம்மட்டோ! நமக்கும் நம் மக்கட்கும், இவ்வுடம்பின்கண் வாழும் இவ் வாழ்க்கைக்குப் பின், வேறு வாழ்க்கையும் உண்டென்னும் கொள்கையும், அதன்கண் நம்பிக்கையும், அதனை நல்வாழ்க்கையாக்கிக் கொள்ளும் நோக்கமும், அது நிறைவேறுதற்கேற்ற உபாயமும், அதனைக் கைக்கொண்டாண் டதனைக் கடைபோகக் காத்துய்க்கு முயற்சியும் என்னும் இன்னோரன்னவை ஒரு சிறிதும் இல்லாதொழிந்து, இவ்வுடம்பை வளர்த்து, இதனைத் திண்ணிதாக்கி, இதன்கண் நெடுநாள் இன்புற்று வாழ்த லொன்றே இவ்வாழ்க்கையின் பயனெனக் கொள்ளுவோமாயின் இதற்கென்று தொடங்கி,நாமும் நம் மக்களும் எதைத்தான் செயயமாட்டோம்! மறுமையின்கண் நம்பிக்கை வைத்திருக்கும்பொழுதே, நமக்குத் தோன்றியவாறெல்லாம் செய்து வருகின்

ரூமே; அதுவு மில்லையாயின் நம்முடைய செய்கை களும் நம்மைப் பார்த்தொழுகும் நமமக்களுடைய செய்கைகளும் என்படா!! ஆகவே, நம்முடைய அல் லது நம் மக்களுடைய திண்ணிய உடம்பு புண்ணிய வுடம்பாகாமையேயன்றிப் பாப உடம்பாய் விடுதலுங் கூடுமே! அவ்வுடம்பில் வாழும் உயிரும் பாபாத் மாவாதல் கூடுமே!! ஆகலின் இவ்வுடம்பை இவ் வுடம்பின் பொருட்டே வளர்த்தலும, அதன்பொரு ட்டே பற்பல உபாயங்களைத் தேடுதலும், அவற்றைக் கையாளுதலும், அதனால்நேரும் சொற்பவின்பத் தைப் பெற்று அவ்வளவின் மகிழ்தலும், இவ்வியல் பினதாகிய அற்ப வாழ்வையே நாம் நம் மக்களிடத் தும் எதிர் பார்த்தலுமே நமது செய்கையாகக், கடைப்பிடித்தொழுகுவோமாயின், நம்மைத் தெருட் டுவார் யாவர்? தெய்வந்தான் தெருட்டும்போலும்! "ஆக்கைக்கே பலிதேடி யலமந்து, காக்கைக்கே இரையாகிக் கழி"யும் வாழ்க்கை மனிதவாழ்க்கை யாகுமா?

மேலும் கடவுளர்க்குக் கீழாகவும், விலங்குகட்கு மேலாகவும் வகுத்துவைக்கப்பட்ட மக்கட் பிறப்பின ராகிய நாம் கடவுட் டன்மையும் விலங்கின்றன்மை யும் கலந்துவைத்தாலன்ன இடைநிகர்த்ததோர் தன்மையையுடையோமாகலின், நாம் கடவுட்டன்மை யைக் கைக்கொண்டு அதன்கட் பயிலாது, மக்கட் டன்மையென வொன்று தனியேயுளதாகவைத் ததனையே கைக்கொண்டு அதன்கட் பயின்றுமெனப் புகுவோமாயின், அப்பயிற்சிக்கட் கடவுட்டன்மை

கலவாமையால், விலங்கின் றன்மையே எஞ்சி நிற்ப, அதனையே மக்கட்டன்மையென மயங்கி, உண்மை யில, விலங்கின்றன்மையிலே பயின்று, விலங்கின் றன்மை பெற்று, மறுமைக்கண் விலங்குகளாதற் கேதுவாமன்றோ? ஆகலிற், கடவுட்டன்மையும் விலங் கின் றன்மையும் கலந்து வைத்தன்ன மக்கட் டன்மையிற், கடவுட்டன்மையிற் பயிறலுறிற், கடவுட் டன்மையே முழுதுங் கைவராவிடினும், கைவந்துள்ள மக்கட்டன்மையேனும் கைவிட்டகலா திருக்குமோ அன்றோ? அங்ஙனமாகவும் இவ்வுடம்பைத் திண்ணிய தாக்குதலாகிய அவ்வொன்றையே பயிறலாற் பயன் யாது?

"எரியெனக் கென்னும் புழுவோவெனக்
கெனுமிந்த மண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்
கெனுந்தான் புசிக்க
நரியெனக் கென்னும் புன்னாயெனக் கென்னு
மிந்நாறுடலைப்
பிரியமுடன் வளர்த்தே னிதனாலென்ன
பேறெனக்கே."

என்பார் பெரியர்.

ஆகலின் இதனைப் புண்ணியவுடம்பும் ஆக்குதல் வேண்டுவோர் யாம் முற்குறிப்பித்தவாறு புண்ணியம் பயப்பதாகிய சத்துவ குண பதார்த்தங்களையே உண வாகக் கோடல் ஒருதலையாம். ஆகவே நாமும் நம் மக்களும் எப்பொழுதும் சத்துவகுண பதார்த்தங் களையே உணவாகக் கொள்ளுதல் வேண்டும்; ஏனைய

பதார்த்தங்களை அறவே விலக்குதல் வேண்டும். சத்துவகுண பதார்த்தங்களை நூற்களிற் கண்டு கொள்ளப்படும்.

உணவு கொள்ளுதல் ஒன்றுமே உடம்பு திண்ணியதாதலில்லை; கருத்தொத்த பயிற்சியான் அஃதவ்வாறாகும்; பயிற்சியும் தன்னால இம்மை, மறுமை வீடென்னும் மும்மையும் பெறுவான் பக்கலே பெரிதும் பயன்படுவதொன்றாம். அது சைவநூல்களிற் கூறப்படும் சரியாதி நாற்பாதங்களின்வைத்து, ஞானபாதமொழித் தொழிந்த ஏனை மூன்று பாதத்துள்ளும் உபாயவித்தையாகப் போதிக்கப்பட்டது. இக்கருத்துணராதார் இம்மையொன்றே பயக்கும வேறு புதுநெறிபற்றிப் பயில்ப. அவர் யாம் இங்குக் காட்டிய ஒன்றிரண்டாம் வாணிபத்தின் உயர்வறியாது முதல்கெட வாணிபஞ் செய்பவராவர்; ஆகலின், அவர் செய்யும் அப் பயிற்சியைப் பயிற்சியென்றே கொள்ளாம்; சைவநூல்களிலே கூறப்பட்ட தொன்னெறிபற்றியே நாமும் நம் மக்களும் பயிறல்வேண்டும். அது செய்தாலே நம்முடம்பும் நம் மக்களுடம்பும் புண்ணிய உடம்பாவான் செல்லும.

நாம் நம் முடம்பை நன்னெறியிலே பயிற்றுதொழிவோமாயின அதுகண்ட நம் மக்களும் தம் முடம்பை நன்னெறியிலே பயிற்றுது கைவிடுவர்; விடுவாராயின், அவர் நமக்குப்பின் சிராத்தந்தானுஞ் செய்தல் அரிதாய்விடும்; அற்றாகலினன்றே சிவாகமங்கள் இவ்வுடம்பு சம்பந்தமாய்ப் பற்பல கருமங்களை விதித்து, அவற்றையெல்லாம் சிவசமபந்தப்படுத்தி,

இவ்வுடம்பின் வாழ்க்கையைக் கேவலம் உடம்பு வாழ்க்கையாக்காது, முழுவதும் உயிரின் பொருட்டே யாகலின் உயிர்வாழ்க்கையே யாக்கி மேன்மேலுயர்த்தி அவ்வுயிரை உய்தி கூட்டுகின்றன !!

இதுகாறுங் கூறியவாற்றால், இவ்வுடம்பும் மக்களுயிர்க் குறுதி பயத்தற் சிறப்பிற்றாகலின், அதனை நன்கு பாதுகாத்திடுதல் வேண்டு மென்பதும், நன்னெறிப்படுத்துதல் வேண்டு மென்பதும், அங்ஙனம் செய்தாலே அது நல்லுடம் பாகுமென்பதும், அந்நல்லுடம்பாலேயே நம் மக்கட்கு நாமும், நமக்கு நம் மக்களும் இனியராதல் கூடும் என்பதும் ஈண்டைக்கேற்ப இயன்றவாறு ஒருவகையாற் காட்டப்பட்டன.

இனி, அவ்வாறுகாட்டுவதும் காண்பது மெல்லாம் அறிவேயாகலின், அதனையும் ஒரு வகையாற் சிறிது சிறிது விரித்துக் கூறுமிடத்துப் படிப்போருள்ளஞ் சலிப்படையுங் கொல்லோவென் றஞ்சிமற்றதன் றன்மையு நோக்கிச், சுருக்கிக் கூறுதல்பேணி, அதனை நமது " திருநாவுக்கரசின் " இரண்டாம் புத்தகத்திலே தொடங்கக் கருதுகின்றோம். திருவருள் கைகூட்டுக.

நன்றாக.

# கடவுள் வழிபாடு.

மனிதன், உடலும் உயிரும் ஆகிய இரண்டினு னும் ஆக்கப்பட்டிருக்கின்முன். உடல் அறிவில்லா தது. உயிர் அறிவுள்ளது. அறிவில்லாத உடலோடு அறிவுள்ள உயிருக்கு உளதாகிய சம்பந்தம் எவ்வா றுண்டாயிற்றோ, அதை அறிய முடியவில்லை. ஆயி னும் உலகத்தில் ஒருவன் மற்றொருவனோடு நண்பு கொள்வானாயின், அவ்விருவர்க்கும் பொதுவாகிய குணம், அவ்விருவரிடத்தும் காணப்படும்; அது போல, உடலுக்கும் உயிருக்கும் உளதாகிய சம்பந் தத்திற்குக் காரணம், அவ்விரண்டினிடத்தும் உள தாகியதோர் பொதுக்குணமேயாதல் வேண்டும்; அது அறியாமையென்னும் குணமென்றாகிக்கலாம். இங்கே அறியாமை யென்றது தானறியாமையை. உடல் தானகவும் அறியாது, அறிவித்தாலும் அறி யாது. உயிர் தானாக அறியாது, அறிவித்தால் அறி யும். உயிர் உடலோடு கூடிய பின்பே, உடலை அறி கின்றது; ஆதலால் உயிர் உடலை அறிதற்கு அவ் வுடலும் காரணம் ஆம்; ஆயினும் உறக்கத்திலறி யாமையடல் அது நேரே காரணமாகாது; உயிரினது அறிதற் சத்தியைப் புடை பெயர்த்துவதற்குத் துணைக்காரணமேயாம். உயிர் உடலோ டுறவுகொள் ளுதற்கு முன், அவ்வுடலின் சுபாவத்தைத் தானாக

அறிந்து, உறவுகொண்டதாகத் தெரியவில்லை. ஆதலால், இவ்வுறவு உயிரின் பொருட்டே உளதாயினும், இவ்வுறவிற்குக் காரணம் அவ்வுயிரினிடத்துளதாயினும், இவ்வுறவை உண்டாக்கியது உயிரல்லவென்றாகித்துக்கொள்ளலாம். இவ்வுறவை உண்டாக்கியது உடலுமல்ல உயிருமல்லவென்றால், இதற்குக்காரணம், இவ்விரண்டையும்விட வேறொன்றாகவன்றோ இருத்தல் வேண்டும்? அதுயாது? அது இவ்வுடலுமாகாது, உயிரும் ஆகாது; இவ்விரண்டுமாகாதென்றால், அது எப்படியிருக்கும்? இவ்வுயிர்க்கு இவ்வுடலாகும் என்று முன்னமே அறிந்து, அவ்வுயிரோடு அவ்வுடலை உறவுகொளுத்தும் அப்பொருளைத் தானாக ஒன்று மறியவியலாத உயிர் எப்படி அறியும்? அறியாது; அவ்வுறவு கொளுத்தும் பொருள் யாதோ, அஃதறிவித்தாலே அறியும்! அவ்வாறறியும் அறிதற் சத்தியைப் புடைபெயர்த்தும் பொருட்டே அவ்வுயிர்க்கு அவ்வுடலை அப்பொருள் கொடுக்குமென்றால், அதுவே தன்னையும் அவ்வுயிர்க்கு அறிவிக்கும், அவ்வுயிரும் அப்பொருள் அறிவித்தா லறியுமேயன்றித் தன்னொத்த உயிர்ப்பொருளறிவித்தாலும் உள்ளபடி யறியாது!! இங்ஙனம் எப்பொருள் தன்னைத் தானாகவே தந்தால் அவ்வுயிர் பெறுகின்றதோ, அப்பொருளைத்தான் உலகம் கடவுட்பொருளென்றெடுத்தோதும் போலும்!!!

உடல் தானாகவும் அறியாது, அறிவித்தாலும் அறியாது; அதற் கறிவிப்பான் 'கடவுள்' என்லே, கடவுள் தானு மறிந்தறிந்தறியும்பொருள் என்பது

தானே பெறப்படும். இவ் வறிவுவகையாற் கடவுட் பொருளோ டுயிர்க்குளதாகிய சம்பந்தத்தை யறிதல் அரியவற்றுளெல்லா மரிதாயிருக்கின்றது.

கடவுட் பொருள் தன்னை உயிர்க்குத் தருதலும், இருவகைப்படுகின்றது; எப்படி? நேரே தருதலும், இன்னொன்றன் வழியாகத் தருதலும் என. அப்படியே உயிரும் அதனை நேராகவும் இன்னொன்றன் வழியாகவும் பெறுகின்றது. இதனால், உயிர் கடவுட்பொருளை நேரே உள்ளபடி தெரிந்து சரியாகவும், மற்றொன்றன் வழியாய்த், தெரிந்து தெரியாமற் சரித்தப்பாகவும், தெரியாமையாற் றப்பேயாகவும் வழிபடுகின்றது. தெரிந்தும், தெரிந்து தெரியாமலும், தெரியாமலும் வழிபடும் வழிபாடுகளனைத்தும் கடவுட் பொருளையே நோக்கி நிற்றலாற் கடவுள் வழிபாடுகளேயாம். தெரிதல், தெரியாமை, தெரிந்து தெரியாமை ஆகிய எல்லாம் அவ்வவ்வுயிரின் தகுதி தகுதியின்மைகளின் நிலைவேறுபாடுகட்குத் தக்கபடியிருக்கும். அறிந்தோர் அவ்வுயிர்களின் நிலைவேறுபாடுகள்பற்றி அவற்றை இகழார்.

உயிர்க்குத், தன்னையும் அதனையும் பிறவற்றையும் உள்ளபடி அறிவிக்கத் தொடங்கிய கடவுட் பொருள், அவற்றை அதற் கெத்தனைவகையால் என்னதன்மையா யறிவிக்குமோ அதனை நாம் அறியோம்! கடவுட்பொருள் அவ்வவ்வுயிரின் தகுதிக் கேற்பத் தன்னை அறிவிக்கும்பொழுது அவ்வவ்வுயிர் அவ்வத்தகுதியி னின்றுகொண் டெவ்வித மாயறிந்து எவ்வெவ்விதமாய் வழிபட்டு, எவ்வெவ்விதமாயின்

புறமோ அவற்றையெல்லாம் தனித்தனி ஒருவகை யால் அவ்வவ்வுயிரும் உள்ளபடி அக்கடவுட் பொருளுமே அறியும்; நம்மால ஒருவகையால் நம்மளவிலறி ஒருநாளும் அவற்றுள் ஒன்றையும் ஒருங்கே உள்ளபடி அறியமுடியாது !! ஆதலால் அவைபற்றி நன்காராய்ந் தறிந்துகூறி முடிபபோமென்றல் வாய்ப் படேயாம்

"ஆடபாலவர்க் கருள்செய்யும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான்புகி லளவில்லை கிளக்கவேண்டா"

என்னும் தமிழ்வேதம், இஃதெல்லாமிங்ஙனமாகவும் கடவுள் வழிபாடுகள்பற்றி உலகம்பலவாறு வாதாடுகின்றது; அதுவும் திருவருட் குறிப்பே போலும் !!!

திருச்சிற்றம்பலம

"நன்கடம்பனைப் பெறறவன் பங்கினன்
தென்கடம்பைத் திருக்சரக கோயிலான்
தன்கட னடியேனையுந் தாங்குதல்
என்கடன் பணிசெயது கிடப்பதே."

திருச்சிற்றம்பலம்.



# அன்பும், அறிவும்.



வித்திலே முளையிருக்கின்றது ; முளையிலும் வித்திருக்கின்றது. முளையிலே முளைக்கக்கூடிய சத்தியும் இருக்கின்றது. நிலம் நீர் முதலியவை வித்தினையும் முளையினையும் பக்குவப்படுத்தி அம்முளையை வெளிப படுத்துகின்றன. அது வெளிப்படும் பொழுது நிலம் முதலிய சில அதற்குத்தடையாகவும் இருக்கின்றன. ஆயினும் அது அவற்றுடன் போராடி அவற்றைத் தள்ளிக்கொண்டு வெளியே வந்துவிடுகின்றது. அப் போராட்டமும் அதற் குதவியே செய்தது. எப்படி? அதை அந்நிலைக்கிசையச் சிறிது பலமுடையதாக்கிற்று. பின் அந் நிலமுதலியன அதற்குப் பலவகையாலும் உதவியே செய்கின்றன. ஆதலால் அது அரை, கிளை, இலை, தளிர், அரும்பு, முகை, மலர், காய், கனி எனப்பல உறுப்புகளாக விரிந்துயாதொரு தடையுமின்றி மேலே ஆகாயத்திலும், கீழே, ஆணிவேர் அல்லது மூலவேர், கிளைவேர், சிறுவேர் முதலிய பல உறுப்புகளாக விரிந்து, பாறை முதலியவற்றையும் உடைத்து யாதொரு தடையுமின்றிப் பூமிக்குள்ளும் பரந்து பலமுடையதும், பலனுடையதுமாகின்றது. கனியுள் வித்திருத்தலின் அது தன்னைப் போலவே பலவற்றை உண்டாக்கி விடுகின்றது. ஆயினும் அதுவும் அதுபோன்றனவும் ஆகாயமுழுவதும்

மண்முழுவதும் நிரம்புவதில்லை. இது போலவே உயிருள்ளும் "வித்" தென்னும் அறிவிருக்கின்றது. அவ்வறிவிற்கும் ஒருவகையான உயிர்த்தன்மையிருக்கின்றது. ஆதலால் அது தானாகவே வளரும் சக்தியுடையதாயிருக்கின்றது. அதற்கு அதனைச்சூழ்ந்துள்ள மற்றப் பொருள்களெல்லாம் உதவி செய்து அதனை வளர்க்கின்றன; அமமட்டோ அதற்குத் தடையும் செய்கின்றன. ஆயினும் அத்தடையையும் தன் முயற்சியினாலேயே தள்ளி மேல்வருகின்றது. அதனால் அத்தடையும் அதற்குதவியே செய்கின்றது. எப்படி? அதை அங்கிலைக் கிசையச் சிறிது பலமுடையதாக்கிற்றன்றோ? பின் அத்தடை அதற்குப் பலபடியாலும் உதவியே செய்கின்றது. ஆதலால் அது மேலோங்கிப் புறத்தே சிறியவும் பெரியவுமாகிய பலநூல்களையும், பல வசனங்களையும் விரித்து, அதனாற் பலவகைபபட்ட உண்மைகளையும், பரவச செய்கின்றது; அகத்தே அறியாமையாலும் பலநாட் பழககத்தாலும அமைநது கிடக்குந் தடிப்புகளை உடைத்துக் கொண்டு, உண்ணேக்கி ஆழ்ந்து, நுணுகி, விரிந்து, தனது லக்ஷியமும, அதனைச் சார்நத பல ஆராய்ச்சிகளும அநுபவங்களுமாக விரிந்து மிகப் பலமுடையதும், பலனுடையதுமாகின்றது. உண்மையுள்ளே அறிவிருத்தலின், அது அவ்வுண்மை கேட்ட உயிர்கட்கெல்லாம், அறிவையே தந்து தன்னொத்த பல அறிவை உண்டாக்கிவிடுகின்றது. ஆயினும்அது தானும் தன்னொத்தனவும் தம்மிற் குறைதீர்ந்தபாடில்லை. இன்னும், இவ்வறிவு நிலனாக

இதன்கண் நின்று இதனையும் வளர்த்துத் தானும் முற்கூறியவாறே, இதற் ககமும் புறமுமாய் வளர்ந் தோங்கி, இதனைத் தன் முகமாக்கித் தன் மயமாக்கித் தானும் இதன் முகமாக, இதற்கு எம்முகமுமாக வெளிப்பட் டளவுகடந்து இதனையும் எவற்றையும் விழுங்கி நிற்பதோர் பேரறிவுண்டு; அது மற்றெல்லா வித்தையும் கடந்த வொன்றாகலின் அதனைக் கடவுள் வித் தென்னலாம்! அக்கடவுள் வித்தும் தன்னை நோக்கி இவ்வுயிர்ப்பொருள் தறிவின் சிறுமையாற் றன்னை இவ்வுயிர்ப் பொருட்குத்தரும் ஆற்றலும், அறிவும், காதலும் தனக்குளவாயினும் அவ்வாறுதரத் தடைப்பட்டும் நிற்கின்றது. ஆதலின் இவ்வுயிர்ப் பொருள் தன்முகமாகிச் சிறிதாயினும் நெகிழ்ந்து காட்டுமாயின அதுவே நல்ல சமயமாக்கி இதனைத் தன்முகமாக்கி ஈர்த்துக்கொண்டு இதனறிவாற்றல் களைப் புடைபெயர்த் திளிரியக்கி இதனை மிகவும் பர பரப்புடையதாக்குகின்றது; அந்நிலையிற்றான் இவ் வுயிர், அல்லது இவ்வுயிரின் அறிவாற்றல்கள் தாமும் அக்கடவுள் வித்தோடு கூடிநின்றே அக்கடவுட் குறிப்பிற்கியைந்து அதன் வசப்பட்டுத் தமக்கிது காறும் உண்மையுணர்ச்சிநிகழவொட்டாது தடுத்து நின்ற தடைகளையெல்லாம் அவ்வாறு இனிச் செய்ய வொட்டாது தம்மைவிடுக்க முயலும்; அவையே தடைவிடைகளாகிய வடிவங்களை எடுக்கும். அந் நிகழ்ச்சியெல்லாம் கடவுட் குறிப்பின் நிகழ மாட் டாவாம். ஆதலின் அந்நிகழ்ச்சி யனைத்தும் பின் வரக்கடவதாயுள்ள மிகப் பெரியதோர்நன்மையையே

நோக்கி நிற்கும். ஆதலாற் றடைவிடைகள் என்பன எந்நாளும் உயிரின் வளர்ச்சிக்கேயன்றி, தளர்ச்சிக் குரியன வல்ல. கடவுட் பொருள் இதனை மௌன மாய் நின்று தெரிவிக்கின்றது. அன்பினால் அறிவும், அறிவினால் ஆற்றலும், ஆற்றலால் மீட்டும் அறிவும், அறிவினால் அன்பும், அன்பினால் திருவருளும், அத னாற் றெளிவும், அதனாற் பேரின்பமும் நிகழும். ஆரம்பம் அல்லது மத்திய காலங்களில் ஏனையவற்றை இல்லையென் றெண்ணலாகாது; அவசரப்படவுங் கூடாது. இதனை "மேதக்க கேள்வியே கேள்வியாம பூமிக்குள் வித்தே, யவ்வித்தின் முளையே, கண்ணே, கருத்தே, யெனைஎன்னை யெழுத்தே, கதிக்கான மோனவடிவே" எனவும்,

"முளையின் வித்துமவ் வித்தின் முளையும் போற்
றளையில் பத்தி சிவப்பிரகாசத்தோ
டளவி யொன்றினொன் றுறு மப்பத்திதான்
வளமுறும் பிறப்பொன்றில் வருவதோ"

எனவும் வரும் ஆன்றோர் வாக்குகள் பலவாறானும், பலவாற்றானும், தெரிந்துகொள்ளலாம். இங்ஙனமாக வும், யாராவது சிலர் அல்லது பலர் நமது ஞானக் குழவியாகிய "திருநாவுக்கரசு" சிலே தமது ஆரம்பம் அல்லது மத்திய கதியிலே அல்லது எந்நிலையிலேனும் நின்று சமயசம்பந்தமாக யாதானு மொன்று வினவு மிடத்து அது தமது கொள்கைக்கு மாறாகத்தான் அல்லது மறுப்பாகத்தா னிருக்கக்கண்டால் அன்பர் கள் சிலர் அல்லது பலர் அதனைக் காணவும் கேட்க-

# உண்மை.



உண்மை ஒருபொழுதும் அழிதலில்லை; ஒன்றுக்கும் அஞ்சுதலும் இல்லை. உண்மை, உயிர்கட்கு உண்மை உணர்வையும், உண்மை இன்பத்தையும் உதவுகின்றது. அது தன்னை விரும்புவோரிடத்தே 'தானேத் தனதாய்' நிற்கின்றது. அது தன்னை விரும்பாதவரிடத்தும் அந்தரங்கத்திலே அதிக மதிப்பைப் பெறுகின்றது. தமக்குத் தாமே உண்மையாயிருப்பவர்களின் இருதயமே தனக்கு அத்தாணி மண்டபமாகக் கொண்டு, அங்கே அரசு வீற்றிருக்கின்றது. உண்மையே எக்காலத்திலும் எப்புவனத்திலும் எவற்றையும் வென்று அரசாள்கின்றது. உண்மையைப் பொய்மையான் மூடிவைப்பினும் அது அப்பொய்மையைத் தள்ளிக்கொண்டு எப்பொழுதாவது வெளிப்பட்டு விடுகின்றது. உண்மைக்கு எத்தனை வடிவங் கொடுப்பினும், அது தன் உண்மை வடிவத்தை மாற்றுவதில்லை; அதனால் தமக்குத்தாமே உண்மையாயிருப்பவர்கள் யார்க்கும் அது விளங்காதொழிவதில்லை. உண்மை தன்னிற்றானே நிறைந்திருக்கின்றது; அதனால் அதற் கொருபொழுதும் ஒரு குறைவுமில்லை. உண்மையின் உண்மையான வாழ்வு பொய்மைக்கு ஒரு பொழுதும் புலப்படுதலில்லை. பொய்மையின் பொய்வாழ்வை உண்மை

ஒருபொழுதும் விரும்புதலில்லை; வியத்தலுமில்லை. பொய்மைக்குச் சொல்வன்மை உண்டென்றல் உள தாயினும், அவ்வன்மைக குண்மையென்னும் உள்ளீ டின்மையால், அது உண்மையுணாவென்னும் சூரிய வெப்பதததிற் காற்றுதொழிகின்றது. உண்மை முது வதின் முதிர்ந்து, புதுவதுமபோற்றுகின்றது; பொய்மை முதுவதினும புதுவதினும உண்மையே கொள்கின்றது; பொய்மை அவ்விரண்டினும தன் னையே கொள்கின்றது. உண்மை தன்னியல்பிற் பெரு மையுடையதாகலிற் பணிகின்றது; பொய்மை அவ் வியல்பிற் சிறுமையுடையதாகலின் நிமிர்கின்றது. உண்மை வன்மையுடைமையின் அடியிற் கிடக்கின் றது; பொய்மை மென்மை யுடைமையின் மேலே மிதக்கின்றது. உண்மை ஆழ்ந்து சென்றடிமுடி காண்கின்றது; பொய்மை மிதந்து சென்று, மேற் கோளினறிச், சாலக்கோட்படுகின்றது. உண்மையின் அருமை பெருமைகட்கு அளவில்லை. சுருங்கச்சொல் லின், உண்மை உண்மையேயாகி உளதாகின்றது; பொயமை பொய்மையேயாகிப் போயொழிகின்றது; உண்மை இல்லையாயின் உலகமும் இல்லை; உயிர்களும் இல்லை; உயிர்க்குயிராகிய கடவுளும் இல்லை. உயிர் கட்குக் கடவுள் வாழ்க்கையுமில்லை. ஆகலின் நாம் உண்மையையே விரும்புதல வேண்டும்; அதனையே நமது வாழ்வாகவும், வைப்பாகவும் கொள்ளுதல் வேண்டும்.

---

# சமயவாதம்.



"சமயவாதிகள் தத்த மதங்களே, அமைவதாக அரற்றிமலேந்தனர்." என்று ஸ்ரீமந் - மாணிக்கவாசக சுவாமிகளும் அருளிச்செய்தனர்; தாயுமான சுவாமிக ளும்"பேதித்த சமயமோ ஒன்றுசொன்னபடி ஒன்று பேசாது." என்றனர். ஆகலாற், சமயங்களும் பல; அவற்றின் கொள்கைகளும பல; அவற்றை நிலைநிறுத் தும்பொருட்டு அவ்வச்சமயவாதிகளாற் கூறப்படுந் தருக்கங்களும் பல. இவை இக்காலத்து மாத்திரம் ஏற்பட்டனவல்ல, எக்காலத்தும் உள்ளனவேயாம்; அவை அவ்வாறுதல தெய்வ சம்மதமெனவே நம்பு கின்றோம். "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ் வவர் பொருளாய்" எனவும், "அறிவினுள்மிக்க வறு வகைச் சமயம் அவ்வவர்க்கங்கே யாரருள்புரிந்து" எனவும், "ஆறுசமயங்கடொறும் வேறுவே றுகிவிளை யாடுமுனை யாவரறிவார்?' எனவும் வருதலால், இது வரை உள்ள சமயங்களும் இனி வரக்கடவனவும் ஆகிய எல்லாம், காலமும் இடமும் உயிர்களின் பக்கு வாபக்குவங்களும் நோக்கி வேண்டப்பட், டவ்வவ் வுயிர்கட் கின்றியமையாதனவாய்த்தெய்வசம்மதமாக வே நடை பெறுவன எனவும், அவ்வச்சமயத்தின் இயல்புக்கும், அவ்வச் சமயிகளின் உண்மைக்கும், அறிவுக்கும், அன்பிற்கும், நமபிக்கைக்குத் தக்கபடி

யே அவ்வவர்க்கங்கே தெய்வம் அருள்செய்யுமெனவும், ஆதலால் ஒன்றையும் இகழலாகாதெனவும் கொள்ளப்படும். சமயவாதிகள், தெய்வசம்மதமாய்த் தத்தமக்கு எது எது நல்லசமயம் என்று தோற்றுமோ, அதை அதையே அவரவர்கள் கொண்டொழுகுவார்கள் என்பதும், அவர்கள் தாம் தாம் கொண்ட சமயமே தத்தமக்கு மெய்ச்சமயமாகத் தோற்றுமென்பதும், அவ்வச்சமயத்தையே அவ்வவர் பாராட்டுதல் முதலியன செய்வர் என்பதும், அங்ஙனம் செய்தல் உலகியற்கையே யாமென்பதும் அறிவுடையோர் யாரும் அறிந்த விஷயங்கான். இது நிற்க.

எத்தனை சமயங்கள் எவ்வெத் தேசததிலே எவ்வெக்காலத்திலே தோற்றினாலும், எவ்வெச்சமயம் எவ்வெச்சமயத்தோடு மாறுபட்டாலும், உண்மை என்பது எவ்விடத்தும், எக்காலத்தும், யார்க்கும் ஒன்றாகவும், நிலையுள்ளதாகவும், எத்தனை அல்லது எவ்வளவு பெரிய அலைகளாலும் அசைக்கமுடியாததாகவும், எப்பொழுதும் இருள் தின்று ஒளிகான்று, இயற்கையிலேயே இன்பம பெருக்குவதாயும், அருளூற்றெடுத்து, அகநெகவோங்கி, உடம்பையும் உயிரையும் ஒருங்கே உருக்குவதாயும், "வாத தாக்கமிடு படிறுறுந் தலைவணங்கி"டும் பரமசாந்தமே தனக்குப் படிவமாகவுடைய பக்குவம் பழுத்த பரம கற்பகதருவாயுமிருக்கும்; உண்மையிலேயே பிறந்து, உண்மையிலேயே வளர்ந்து, உண்மையிலேயே திளைத்து, உண்மையிலே நிலைபெறும் உண்மைப்பேறுடையார்க்கே,

அது தன்னை உண்மையாகவே காட்டும்; மற்றவர்க்கு அது தன்னைக் காட்டிக்கொள்ளாது; உண்மையையே விரும்பி, அதன்பொருட் டுழைப்பவர்கள் யாரோ, அவர்கட்கே அது கிடைக்கத் தக்கதென்பது உண்மையேயாம். அவ்வாறன்றி மற்றெதன்பொருட்டாவது அதைத் தேடுபவர்க்கு அது வெகு தூரத்தே நிற்கும், அல்லது ஆழத்தே கிடக்கும். வழி தெரிந்தோரை அது தானாகவே அடைகின்றது. உள்ளதை உள்ளதாகவும், இல்லதை இல்லதாகவும், யார் நினைக்கவும் சொல்லவும் பழகுகின்றார்களோ, அவர்கட்கே அதை ஒருவகையால் அல்லது பலவகையால நினைக்கவும் சொல்லவும்கூடும்; உள்ளதை இல்லதாகவும் இல்லதை உள்ளதாகவும நினைக்கவும சொல்லவும் யார பழகுகின்றார்களோ, அவர்கட்கு அதை நினைக்கவும முடியாது, சொல்லவும முடியாது; அறிந்தோர் சொன்னாலும் அவர்களால அறியவு முடியாது. ஆதலால் உண்மையை அறியவி ரும்புவோர, உண்மையாகவே நினைக்கவும், உண்மையையே நினைக்கவும, உண்மையையே சொல்லவும, உண்மையாகவே பழகவேண்டும். உண்மையைச் சூரியனுக்கொப்பிடலாம. சூரியனைப் பார்த்தோர்க்கு அதனைப் பார்த்தபின் மற்றொன்றையும் பார்க்கமுடியாது; மற்றைய எல்லாம் இருள்மயமாகவேதோன்றும், வேறுபொருளைப்பார்க்கவிரும்பினாலும் அச்சூரிய னுதவிகொண்டே பார்க்கவேண்டும்,— அதாவது(அச்சூரியன்) ஒளிகொண்டே பார்க்கவேண்டும்; வேறொன்றாற் பார்க்கமுடியாது; வேறொன்றாற் பார்த்தால்,அப்படிப் பார்க்கப்பட்டபொருள் வேறொ

ன்றுகவே, தோற்றும், உள்ளபடி விளங்காது. அது போல உண்மையை அறியவேண்டுவோர் எப்பொருளி லும் எப்பொழுதும் அவ்வுண்மையையேபார்க்கவேண் டும்; அப்படிப் பார்ப்பதுதான் அறிவுடையோர் கட மை; அறிவுடையோர்க்கு எப்பொழுதும் எப்பொரு ளிலும் அவ்வுண்மைதான் தோற்றும், உண்மை அல் லாதது அவர்களதறிவுக்குக தப்பிவிடும். உண்மை யறியாதவர்கட்கு முதல் முதல் அஃதல்லாததுதான் தோற்றும; அது உண்மையல்லவென்று அவர்கட்குத் தோற்றுதல மிகவும அருமையாயிருக்கும; தோற்றி னல் அதைப்பற்றி விசாரிக்கப்புகுவார்கள்; அவ்விசா ரணையிலே அவர்களியல்புக்குத தக்கபடி காலும் வரும்; அவ்வியல்புளாரதோர அவர்க் குணமை உணர்த்துமுறையா லுணர்த்தித் தெளிவித்திடுவார் களேயன்றி, மனம வருநத மாட்டார்கள். உண்மை யறியாதவர்களும் உண்மை யுணர்ந்தவர்கள் போல வெளியே ஒழுகுகின்றார்கள். அவ்வொழுக்கமும் வேறு, உண்மையுணர்ந்தவர்களது ஒழுக்கமும வேறு. அவ்விரண்டொழுக்கங்கட்கும எவ்வளவோ வித்தியாச முண்டு. அவ்விரண்டையும் ஒன்றென்று கொள்ளலா காது; அவ்விரண்டாலும ஒரே பயன் விளைதலும் இல்லை; வெவ்வேறு பயனே விளையும்; ஆதலால், உண் மையை உணர்ந்தே அதனைக் கடைப்பிடித்தொழுகு தல் வேண்டும்.

உண்மையுணர்ந் தோருடைய ஒழுக்கத்திலே உள்ள உண்மையைத் தெரிநது கொள்ள வேண்டி,

ஒருவன் அவர்களுடைய ஒழுக்கத்தில் உண்மை விசாரித்தல் குற்றமல்ல. ஆனால் அவன் உள்ளபடி உண்மையையே விரும்பி, அதனையே அறிய ஒருப்படுவானாயின், அவனுக்கு அவ்வுண்மையே விளங்குமன்றி, வேறொன்றும் விளங்காதென்று முன்னமே சொன்னோம். அவன் அவ்வொழுக்கத்திலே குற்றமொன்றே காண்பானாயின், அவன் உள்ளபடி உண்மையறியப் புகுந்தவனல்லன். உலகத்திலே உண்மையும் பொய்மையும் கலந்தேயிருக்கின்றன; அவற்றுட் பொய்மையைப் பொய்மையாகவே கண்டோன் அப்பொய்மையைத் தள்ளி மெய்மையைக் கொள்ள வேண்டுவதுதான். ஆனால் முதல் முதற் பொய்மையை அல்லது குற்றத்தைக் காண்பதைப் பார்க்கிலும், கண்டபின் அதனைப் பொய்மை அல்லது குற்றமென்றறிவதைப்பார்க்கிலும், அவ்வாறறிந்தபின அவன் தானாக அதனைத் தள்ளுவதைப் பார்க்கிலும், உண்மையை உள்ளபடி யறிவே, அப்பொய்மை அவ்வாறறிந்த வறிவுக்குத் தான் விஷயமாகாமலேயே நீங்கி விடுமன்றோ? அவ்வாறு அது தானே நீங்கிவிடுதல் நல்லமுறை யல்லவா? பொய்மையாவது குற்றமாவது நமக்குத தெரியாமலேயிருக்கப பழகுதல் நல்லதா? தெரிந்து பழகிக் கொண்டபின் நீக்க முயலுதல் நல்லதா? ஆகையாற் சமய வாதிகள் எச்சமயத்திலும், அல்லது எச்சமயத்தாரது ஒழுக்கத்திலும் முதல் முதற் குற்றங்காண்பலதவிட, அதிலுள்ள உண்மையை உணர்ந்துகொள்ள விரும்புதலே மிக நல்லதாம். அதிலே தான் ஆன்மலாபமிருக்கின்றது.

# வாழ்வு.



மாந்தர் உள்ளும் புறமும் ஒத்து வாழ்கின்றிலர்—இது பெரும்பான்மை. உள்ளும்புறமும் ஒத்து வாழ்வார் ஒரு சிலரே ஆவர். ஆகலின், உள்ளும்புறமும் ஒத்து வாழ்தல் அரியவற்றுளெல்லாம் அரிய தொன்றும். உள்ளும் புறமும் ஒத்து வாழ்தலின் அருமையை ஒவ்வொருவரும் தத்தம் வாழ்க்கையின் வைத்தே அறிந்துகொள்ளுதல் கூடும். உள்ளும் புறமும் ஒத்தலாவது உள்ளத்தான் உள்ளுதலும், நாவினுன் நவிறலும், மெய்யினுன் இயற்றலும் ஒன்றுதல். இவ்வாறன்றி, உள்ளத்தான் உள்ளுதல் ஒன்றும், நாவினுன் நவிறல் ஒன்றும், மெய்யினுன் இயற்றல் ஒன்றுமாக வேறுபடின், அது உள்ளும்புறமும் ஒவ்வாத வாழ்க்கையாம். இவ்வொவ்வாத வாழ்க்கையினையே மாந்தரிற் பெரும்பாலார் தமக் கொத்த வாழ்க்கையெனக் கொண்டொழுகுகின்றனர். அவ் வாழ்க்கை உயர்ந்தோரால் வாழாமையின்வைத் தெண்ணப்படும்போலும்.

மாந்தர் அனைவரும் பிறப்பால் ஒருவர். அவருள் ஒவ்வொருவர்க்கும் உள்ளம் மொழி செய்கை என இம் மூன்றும் உள. ஒவ்வொருவரும் உள்ள முதலிய மூன்றுமுடையராய வழியும், அவர் தனித்

தனி மூவராகாது, ஒவ்வொருவரே ஆவர் ஆயினும் ஒருவர் உள்ளத்தான் ஒருவரும், மொழியான் மற்றொருவரும், செய்கையாற் பிறிதொருவருமாகக் காணப்படின், அவரை ஒருவரென்போமா, மூவரென்போமா? அவரே இடம் பொழுதென்னும் அவற்றின் வேறுபாட்டால், இன்னும் பலராவர் போலும்! இங்ஙனம் ஒருவரே பலராயின், அவரை, மாந்தருள் ஒருவராய்வைத் தெண்ணுதல் எங்ஙனங் கூடும்? அவர் தமக்குத் தாமே ஒருவராதலும் எங்ஙனங் கூடும்? கூடாதாயின், அவர் தமக்கும் பிறர்க்கும் என்கடவர்? அவர் வாழ்க்கையும் யாதாய் முடியும்? இதனாலன்றோ மாந்தர் இடம் பொருளேவலும், உளமுறை வினையும் உடையராய வழியும் அவற்றால் இன்ப நுகராது துன்புறுகின்றனர்! உளமுரை வினையெனும் மூன்றனும் மாந்தர் தமக்குத்தாமே பகைவராயின், அவர் தம்மொத்த ஏனை மாந்தரோடொத்து வாழ்தல் எங்ஙனங் கூடும்?

மாந்தர் உடம்பான் வாழ்துமென்றலும், இடம் பொருளேவலான் வாழ்துமென்றலும், இம்மையான் வாழ்து மென்றலும், மறுமையான் வாழ்துமென்றலும், இவையனைத்தினும் வேறாய வீட்டான் வாழ்துமென்றலும் அவர் தம் உளம், உரை வினையெனும் மூன்றும் ஒத்தவழியே உண்டாம், இலையெனின் இலையாம்.

உடம்பு முதலியவற்றான் வாழ்துமென்பார்க்கு அவ்வுடம்பு முதலியவற்றின் நிலையாமை நோக்கித்

துன்பமுண்டாம். வீட்டான் வாழ்துமென்பார்க்கு அவ் வீடு கைகூடுதலருமை நோக்கித் துன்பமுண்டாம். உடம்பு முதலியன நிலையினும் நிலையாதொழியினும் வீடு கைகூடினும் கூடாதொழியினும் எவ்வாற்றினும் உளம் உரை வினையெனும் மூன்றனுந் தூயராயினோர்க்கு எத்திறத்தானும் இன்பமே உண்டாம்; அவ்வின்பமும் உண்மை யின்பமேயாம். அவர்க்கு "வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்" என ஓதிய இப்பொய்வாழ்வும் மெய்வாழ்வேயாய்ப் போதரும் போலும்! ஆகவே வாழ்வுள்ளும் மெய்வாழ்வு பொய்வாழ்வு என இரண்டுளவாமென்பதும், அவற்றுள்ளும் மெய்வாழ்வென்னும் அதுவே இன்பந்தருவதொன்றாம் என்பதும் பெறப்படும். பொய்வாழ்விலே இன்பந் தேடுவார் உமிக் குற்றிக் கைவருந்துவார்.

*     *     *     *     *     *     *

உலகம், உயிர், கடவுள் எனப் பொருள் மூவகைப்படும். அவற்றுள் நடுவணதாகிய உயிர் உலகத்தோடு கூடியும் வாழும், கடவுளோடு கூடியும் வாழும்; உலகத்தோடு கூடி வாழும் பொழுது அதன் தன்மை எய்தியும், கடவுளோடு கூடிவாழும்பொழுது அதன் தன்மை எய்தியும் நிற்கும். கடவுட்பொருள் உலகம் உயிர் என்னும் அவ்விரண்டினோடு கூடி நின்றும் கூடாமல் ஓங்கிநிற்கும்; அதனால் அது அவ்வுலகத்தின் றன்மையாவது, உயிரின் றன்மையாவது எய்துதல் இல்லை; எய்தாதெனினும் வாழ்[illegible], அது வாழாவாழ்க்கையை உடையதாம். அதனைப்

பிறிதொன்று வாழ்வித்தல இல்லை, தானே பிறி தொன்றை வாழ்விப்ப தல்லது.

கடவுட்பொருள் உயிரை உலகத்தோடு கூட்டி, உலகவாழ்வு எய்துவித்தும் தன்னோடுகூட்டித் தன் கடவுள் வாழ்வு எய்துவித்தும் நிற்கும்; தோற்ற மாத் திரையின் உலகத்தோடு கூடிநின்றே உயிர் கடவுள் வாழ்வு எய்துதற்கு இழுக்கில்லை.

உலகம் அறிவில் பொருளாகலின், அறிவுடைப் பொருளாகிய உயிர்க்கு அதனோடு கூடிவாழுதல் யோனையன்றும்; ஆயினும், அவ்வுயிர் கடவுட்பொரு ளோடு கூடிவாழ்தற் பொருட்டாய்க, கடவுட் குறிப் பான் நிகழ்தலின் அதுவும் வாழ்க்கையின் வைத் துணரப்படும். படவே உயிர கடவுட் குறிப்போடு பொருந்த வாழாதாயின், அதன் உலகவாழ்க்கை வாழ்க்கையன்றாமென்பதாயிற்று. இதனையேபோலும் "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே" என்றோதிற்று மணிவாசகம்.

உலகம அதன நிலையாமை நோக்கிய பொய்யா கலின், அதனோடு கூடி வாழும் வாழ்வும் பொய் வாழ்வாம்; அதனை மெய்யெனக்கோடல் புன்மை யாம். உலகத்தோடு பொருந்திநின்றே அதனோடு பொருந்தாது ஒங்கிநிற்றலே வேண்டுவார், அவவாறு இயல்பான் ஒங்கிநிற்கும் கடவுட்பெருருளின் குறி ப்பு நோக்கி, அதனோடு பொருந்தவொழுகி வாழ்தல் வேண்டும். அவ்வாறொழுகி வாழும் வாழ்வு புறத்தே

ஒருவகையால் உலகவாழ்வெனத் தோற்றினும், உண்ணேக்குவார்க்கு அஃதின்மையான், அஃதுலகவாழ்க்கையாகாது கடவுள்வாழ்க்கையேயாம். எனவே உலகவாழ்வாகிய பொய்வாழ்விலேயே, கடவுள்வாழ்வாகிய மெய்வாழ்வும் வாழலா மென்பது தெற்றென விளங்கும. ஆயிற் கடவுள் வாழ்விற் பயிற்சி இடையறாது நிகழ்தலின்றிச் சிறிதயரின் அவ்வுயிரை உலகவாழ்வு ஆறலைத்துக் கீழ்றூக்கும். இவ்வுண்மை உணர்ந்து தம்மை உய்புநெறிக்கண் உய்க்கும் ஆற்றலுடையார் அயர்வின்றியும் மயர்வின்றியும் வாழ்ந்து மெய்வாழ்வெய்துவர்.

---

# கடவுள் வாழ்த்து.



கடவுள் ஒருவரா வாழ்த்துகையால் வாழ்ந்து போவானும் அல்லன்; வாழ்த்தாமையால் வாளா இருப்பவனும் அல்லன்; தாழ்த்துகையால் தாழ்ந் தொழிவானும் அல்லன். அவனை வாழ்த்துவோர் வாழ்வர்; வாழ்த்தாதார் வாழ்க்கையால் ஆய பயன் கொள்ளார், தாழ்த்துவோர் தாழ்வர்.

கடவுள் ஒன்றை வேண்டலும் இலன், வெறுத்தலும் இலன். அதனால், அவன் தன்னை வாழ்த்துவோர் பால் விருப்பும், வாழ்த்தாதொழிவோர் அல்லது தாழ்த்துவோர்பால் வெறுப்பும் உடையன் அல்லன். உயிர்கள் ஆகிய வானவர் முதலியோரே ஒன்றை வேண்டுகின்றார்கள் அல்லது வெறுக்கின்றார்கள். அதனால், அவர் தமக்குவேண்டுவன செய்தாரை விரும்புதலும் புகழ்தலும், வெறுப்பன செய்தாரை வெறுத்தலும் இகழ்தலும் செய்கின்றார்கள்.

கடவுள் தன்னலம் கருதுபவன் அல்லன்; பிறர் நலம் கருதும் பேரருளாளன்; அதனால், உயிர்கள் தம் சிறுமைக்கேற்ப, வெறுப்பனவே செய்யினும், அவற்றைப் பொருட்படுத்தாது தன் பெருமையினாற் பொறுப்பவனே ஆம். உயிர்கள் அந்நலங் கருதியும் தந்நலங் கருதியும் அவனை வாழ்த்துதல் செய்வர்

என்பது மேல் வரும் அருட்பாக்களால் அறியப் படும். அவை வருமாறு:—

திருச்சிற்றம்பலம்.

"வெறுப்பனவே செய்யு மென் சிறுமையை
நின் பெருமையினாற்
பொறுப்பவனே யராப் பூண்பவனே பொங்கு
கங்கை சடைச்
செறுப்பவனே நின் திருவருளா லென்
பிறவியை வேர்
அறுப்பவனே யுடையா யடியே னுன்
னடைக்கலமே."

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வா
மென நின்பாற்
றாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மை யெல்லாந்
தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை
நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவா னியானுமுனைப்
பரவுவனே."

திருச்சிற்றம்பலம்.

உயிர்களாகிய நாம் சிற்றறிவும் சிறு தொழிலும் உடையோம். அதனால் நமக்கு வேண்டத் தகுவது இது தகாதது இதுவென உள்ளபடி வகுத்துணர்தலும், வேண்டத்தகுவது இதுவென உணரினும், அதனை வேண்டிப் பெறுந் தகுதி நமக்கு உளதோ இலதோ என அறிதலும், அதற் கேற்ப முயறலும், பெறுதலும் இயலாவாம். இதனால், நாம் ஒன்றை வேண்டி

# கடவுள் வாழ்த்து.



கடவுள் ஒருவர் வாழ்த்துகையால் வாழ்ந்து போவானும் அல்லன்; வாழ்த்தாமையால் வாளா இருப்பவனும் அல்லன்; தாழ்த்துகையால் தாழ்ந்தொழிவானும் அல்லன். அவனை வாழ்த்துவோர் வாழ்வர்; வாழ்த்தாதார் வாழ்க்கையால் ஆய பயன் கொள்ளார், தாழ்த்துவோர் தாழ்வர்.

கடவுள் ஒன்றை வேண்டுதலும் இலன், வெறுத்தலும் இலன். அதனால், அவன் தனனை வாழ்த்துவோர்பால் விருப்பும், வாழ்த்தாதொழிவோர் அல்லது தாழ்த்துவோர்பால் வெறுப்பும் உடையன் அல்லன். உயிர்கள் ஆகிய வானவர் முதலியோரே ஒன்றை வேண்டுகின்றார்கள் அல்லது வெறுக்கின்றார்கள். அதனால், அவர் தமக்குவேண்டுவன செய்தாரை விரும்புதலும் புகழ்தலும், வெறுப்பன செய்தாரை வெறுத்தலும் இகழ்தலும் செய்கின்றார்கள்.

கடவுள் தன்னலம் கருதுபவன் அல்லன்; பிறர் நலம் கருதும் பேரருளாளன்; அதனால், உயிர்கள் தம் சிறுமைக்கேற்ப, வெறுப்பனவே செய்யினும், அவற்றைப் பொருட்படுத்தாது தன் பெருமையினால் பொறுப்பவனே ஆம். உயிர்கள் அந்நலங் கருதியும் தந்நலங் கருதியும் அவனை வாழ்த்துதல் செய்வர்

என்பது மேல் வரும் அருட்பாக்களால் அறியப் படும். அவை வருமாறு:—

திருச்சிற்றம்பலம்.

"வெறுப்பனவே செய்யு மென் சிறுமையை
நின் பெருமையினாற்
பொறுப்பவனே யராப் பூண்பவனே பொங்கு
கங்கைச் சடைச்
செறுப்பவனே நின் திருவருளா லென்
பிறவியை வேர்
அறுப்பவனே யுடையா யடியே னுன்
னடைக்கலமே."

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வா
மென நின்பாற்
றாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மை யெல்லாந்
தொழ வேண்டிச்
சூழ்த்தமது கரமுரலுந் தாரோயை
நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவா னியானு முன்னைப்
பரவுவனே."

திருச்சிற்றம்பலம்.

உயிர்களாகிய நாம் சிற்றறிவும் சிறு தொழிலும் உடையோம். அதனால் நமக்கு வேண்டத் தகுவதிது தகாததிதுவென உள்ளபடி வகுத்துணர்தலும், வேண்டத்தகுவது இதுவென உணரினும், அதனை வேண்டிப் பெறுந் தகுதி நமக்கு உளதோ இலதோ என அறிதலும், அதற் கேற்ப முயறலும், பெறுதலும் இயலாவாம். இதனால், நாம் ஒன்றை வேண்டி

ஞல், அது நமக்கு நன்ருய் முடியினும் முடியும், தீதாய் முடியினும் முடியும், இவற்றுள் ஒன்றினும் படாததாய் முடியினும் முடியும் ; இன்னது இதுவாம் என ஒன்றைத் துணிய முடியவில்லை. அன்றியும், நாம் "ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட்டொன்ருகும், அன்றி அது வரினும் வந்தெய்தும்—ஒன்றை நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்" இவையெல்லாம் நம் செயல் அல்லவே ! நம்மை ஆளும் கடவுளுடைய செயலே அன்ருே ? ஆதலால் நமக்கு வேண்டத்தகுவது இதுவெனக்கொண்டு, அவனிடத்தே நாமாக ஒன்றை வேண்டலும் இன்றி வெறுத்தலும் இன்றி, அவன் றந்தது பெற்று, அதுவே நமக்கு நன்றெனக்கொண்டு நமதுள்ள நிரம்பி, அவன்றன் குறிப்பறிந்தொழுகி, அவனை வாழ்த்தியிருத்தலே உண்மையான வாழ்க்கையாம். இதனை மேல்வரும் அருட்பாவினுல் அறிந்துகொள்ளப்படும்.

அது வருமாறு:—

திருச்சிற்றம்பலம்.

"வேண்டத் தக்க தறிவோய் நீ
வேண்ட முழுதுந் தருவோய் நீ
வேண்டு மயன்மாற் கரியோய் நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய
வேண்டி நீ யாதருள் செய்தா
யானு மதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னி
லதுவுமுன்றன விருப்பன்றே"

திருச்சிற்றம்பலம்.

மேலும், "கடவுள் தன்னை வாழ்த்துவோரை வாழ்த்துவன்" என்னும் அதனால் அவனை ஒன்று விரும்பி வாழ்த்துதலும், வாழ்த்தாதொழியிற் றன் புறத்துங்கொல்லோ என அவனை அஞ்சி வாழ்த்துதலும் உளவாம். அவையெல்லாம் அத்துணைச் சிறப புடையனவலல. கடவுள் நம்மை வாழ்த்தினும், வாழ்த்தாதொழியினும், தாழ்க்கினும, அவற்றுள் ஒன்றையும் நோக்காது, அவன் நமது ஆண்டான், நாம் அவனது அடிமை ;. அவன் நமது தந்தை, நாம் அவனுடைய பிள்ளைகள், என்னும் அத்துணையே யறிந்து, அவ்வளவிலே உவகைபொங்கி வாழ்த்துவதே, ஏனை வாழ்த்துக்கள் அனைத்தையுங் கடந்த கடவுள வாழ்த்தாம். இதனை நோக்கியேபோலும்,

"வாழ்த்துவாய் வாழ்த்தா தொழிவாய் மறுசுழியிட்
டாழ்த்துவா யஃதறிவாய் நீயன்றே—யாழ்த்தகைய
வண்டாா பொழிற்கயிலை வாழ்கென் றிருப்பதே
கண்டா யடியேன் கடன்."

என்றருளிச செயதார் நக்கீரதேவ நாயனார்

# குறையிரந்து நிற்றல்.

அருட்பெருங் கடலே, 1.

உமது அருட்பெருந் தன்மையின் இயல்பு இது வாகும் என்று ஒன்றும் அறிந்தவனல்லேன். ஒரு வகையால அறிந்துளேன் என்பீராயின் அது, உமது படைப்புப பொருள்களின் அமைதியால் அடியேற் குண்டாம் வியப்புமுதலியன பற்றியும், உமது உண்மையடியார்கள் உமது திருவருளால் உணர்ந் துரைக்கும் கட்டுரைகள் பற்றியும எழுந்த தொன் றுகலாம. இவ்வளவேயன்றி, உம்மை நேரே அறிந்தே னென்றும், உமது திருவருளை நேரே உணர்ந்தேன் என்றும, உம்மையும் உமது இன்னருளையும நேரே நுகர்ந்து இன்புற்றேன், இன்புறுகின்றேன் என்றும என்னால் நினைக்கவும் சொல்லவும் முடியவில்லை.

நீர் என்னிடத்தும மற்றெவ்விடத்தும் எள் ளும் எண்ணெயுமபோல் நிறைந்திருக்கின்றீர் என்று நும்மை உணர்ந்தோர் எல்லாம் கூறுகின்றனர். ஆயி னும், அடியேனால் நும்மை அறிய முடியவில்லை. அடி யேற்கு நும்மை இடைநின்றுமறைப்பது இன்ன தென்று தெரியவுமில்லை. நும்மை அருட்பெருங் கடலென்று நுமது அடியாரெல்லாம் அறிந்து கூறு கின்றனர்; ஆதலால் அடியேற்குக் காட்டக் கூடா

தென்று நம்மை நீரே ஒளித்துக்கொள்வீரும் அல்லீர். நீரே அடியேற்கு வெளிப்படும்பொழுது, நமது நோக்கத்திற்கு மாறாக, நம்மைத் தடுக்கமாட்டுவனவும் உளவாகலாம் என்று ஒருவரும் நினைக்கத்தானும் துணியாரென் றெண்ணுகின்றேன. அடியேற்கு நம்மை மறைக்கமாட்டுவது ஒன்றுண்டெனின் அஃது அடியேனை மறைக்குமோ நம்மை மறைக்குமோ, அதனை அறிய முடியவில்லை; நம்மை மறைக்குமென ஒருவரும் நினையார்; அடியேனை மறைக்குமெனின், நீவி ரிடையீடின்றி என்றும் எவ்விடையிருக்கும்பொழுது அஃதொல்லுவ தொன்றல்லவே; ஒளியோடு இருள் உடனுறைதலின்றே, ஒளி ஊடுருவ நிற்கும் அல்லது புடைபெயரும் காற்றுக்கட் புலப்படாதவாறு அது நமது நிறைவினுற் புலப்படாவிடினும் நம்மை அடியேன அறிதற்கு அது தடையாமா றின்றே; நீவிரே மறைகின்றீர் மறைக்கின்றீர் என ஒன்று நினைக்கவும் நெஞ்சு பதறுகின்றது, வாழ்த்தவும் வாய் கூசுகின்றதே, ஒருவகையால் நோக்குமிடத்து மகளிருடல் இன்பம் பெருக்குதற் பொருட்டாதல்போல நமது மறைப்பும் அடியேற் கறிவகற்றி இன்பம் பெருக்குமாயின், அது நம தருட்பெருந்தகைமைக்கு மாறாகாமையின் நீவிரே அவ்வாறு மறைத்தருளுதிர் என்று கொண்டாற் குற்றமுண்டோ உண்டாயிற் பொறுத்தருளல் வேண்டும்; இதனுண்மை நீவிர் அடியேற்கு வெளிப்படும்பொழுது தான் விளங்குமபோலும்! ஐயோ, இதற் கென் செயவேன் !!

நம்மை ஞாலத்தா லறிவ லெனின், அது நமது உண்மையையும் நமது அருட்பெருந் தன்மையையும் அறிவோர் தகுதிககேற்ப ஒரோவழி விளக்குகின்றது; அது தான் நம்மை அறிந்தறிவிப்பதன்று. அதனல் அதன் வாயிலாய்த் தோன்றும் அறிவு விளக்கம் போதுமென்று தோற்ற வில்லை. ஆயின் நூலுணர்வால் விளங்கும் அறிவுவிளக்கமும் நம்மையும் நமதருள்விளக்கத்தையும் அறியவல்லுமென்று அடியேற்குத் தோன்றுகின்றிலது. நமது அருள் விளக்கமின்றி இவ்வூன் கண்ணுக்கும், இவ் வுளக் கண்ணுக்கும் எத்துணைநாட் செல்லுகினும் உண்மை விளங்கப்பெறுதல் இல்லையென்றே எண்ணுகின்றேன்.—இதுநிற்க.

அடியேன் நம்மை இங்ஙனம் உள்ளபடி உணரப் பெறுதபொழுது அடியேன் நம்மை முன்னும் அறிந்துளேன்போலவும், நம்மோடு பண்டும்பயின்றுளேன்போலவும் நம்மை ஒருவகையால் நினைக்கின்றேன், அன்பு செய்கின்றேன், உரையாடுகின்றேன்; இதுவென்?

இது என் தாய் தந்தையர் அல்லது ஏனையர் தந்ததேயோ? அல்லது முற்கூறியவாறு நமது படைப்புப் பொருள் பலவுந் தந்ததேயோ? அம்மம்ம, இது பெரிதும் வியப்புடைத்தாகின்றது!. இவ்வகை உணர்வினுல் அடியேனதுள்ளம் ஒரு சிறிதும் நிரம்புகின்றிலதாயின், இதனை யாரொடுநோகேன்

யார்க்கெடுத்துரைக்கேன்? அப்பனே, இந்நிலையின் அடியேனை தலைமாற்கோ ரளவின்று.

அடியேனையே, அடியேன் ஆரென் றறியாத பொழுது அடியே னுயிர்க்குயிராய்நின் றடியேனை யியக்கி நிற்கும் நும்மை எங்ஙனம் அறிகிற்பேன்! உம தினனருளின்றி அடியேனையும் அடியேனுலறிய வியலாதாயின், அவ்வினனருளையேயன்றி அடியேன் வேறெதனை நாடுகிற்பேன்? அவ்வின்னருளின் இயல் பும் ஈதென்றறிய மாட்டேனாயின் அதனை எங்ஙனம் நாடி, எங்ஙனம் பெறுகேன்?

உண்டிப் பொருட்டானும் உடைப்பொருட்டா னும், ஆண்டினவானும், இன்னோரன்ன பலவாற்றா னும் அடியேனதுள்ளம் இடர்ப்படும் நாட்களை அடி யேன தறிவாறறல்கொண்டு வேறெடுத் தெண்ணி முடித்தல் இயலாது; அடிகளே அளந்தறிய வலலீர். அந்நாட்களிடையே அடியேன் நும்மை அறிதற் கென் றெழுந்த நாளும், நும்மை வியந்த நாளும், நும்மை உள்ளபடி அன்பு செய்த நாளும் இத்தனை யென்றெண்ணுந் மென்றெண்ணுதிராயின் அது, நமது திருவுளத்திற்குத் தானும் சாரவாராத அந் நிலையிற்றா னிருக்கும்போதும்! என்னை? அவைதாம் உண்மையறிவுக்கும், உண்மை வியப்புக்கும், உண்மை யன்புக்கும் பயன்படினன்றோ உண்மைப் பிழம் பாகிய உமது திருவுளத்தைச் சாரும்? "கண்ணொளி யானுங் கண்டேன்" என்றும், "ஐம்புலன்கள் காண் கிலா" வென்றும், "கண்டுங் கண்டிலேன்" என்றும்

அருட்பாலே ஒதுமாயின், அடியேன் நாமது உண்மையை அறிதற்கும், வியத்தற்கும், அன்புசெய்தற்கும், நமது அருள் பெறுதற்கும எத்திறத்தேன்!

அடியேற்கும் நமக்கும் உள்ள தொடர்பினை ஈதென்றறிந்துகொள்ள அடியேனால் முடியவில்லை. அடியேற்கு நமது திருவருட்பேறின்மையால அடியேன் நம்மைப் பலவகையாலும் நினைத்து ஒன்றிலுந் துணிவுபிறவாது அயர்கின்றேன்.—ஓர்பொழுது அடியேன் இஞ்ஞாலமெல்லாம இயற்கையாற புடைபெயருமென் றெண்ணுவேனா; ஓர்பொழுது அற்றன்று, அது தான் இத்துணை நோக்கம முதலியன பற்றி தானாக இயலவல்லுவதன்று; அதனாற் றனக்கோர் முதல்வனை வேண்டி நிற்கின்றதெனை றெண்ணுவேன்; மற்றும் முதலவன் உளனெனின் வெளிப்படான்கொல், வெளிப்பட்டான் அருள் செய்தான் என்னும் வரலாறுளளதலைது அதனைக் கண்டறிவாரைத்தானும், அடியேன் கண்டறியாமையின் அம்முதல்வன்றான் உளனோ இலனோ என்றையுறுவேன்; அன்றியும முதல்வன உளனயினும், அடியேற்கு இத்துணை நாளும தன்னையும என்னையும வெளிப்படுத்தருளசெய்யாத அவன் இனி அருள்செய்வான் என்று எண்ணித் துணிவதெங்ஙனமென் றெண்ணுவேன்; அவனை உளனென்பார்க்கும இலனெனபார்க்கும் ஒருங்கொப்ப ஞாலம இயறல்காண்டுமாகலின் அவன் உளனாயினென்? இலனாயினென்? என்று நிமிர்தலுஞ் செய்வேன்; ஈதெல்லாம் எனதெண்ணமேயன்றி இவற்றிற்கீடாக வேறு பொருளொன்றின்று என்றும்

எண்ணுவேன் ; இப் பிறவிக்கு முன் எவ்வாறிருந்தேன் என்றுந் தெரிகின்றிலது, இதற்குப்பின் இவ்வாறுமென்றுந் தெரிகின்றிலது, இப்பொழுது நிகழும் இதுவும இன்னதற்கென்றும் இன்னதென்றும் தெரிகின்றிலது. ஈண்டு நிகழுட அனைத்தும உண்பதும் உறங்குவதும், இன்பமுந துன்பமுமாய்த் தோன்றி இறுதியில ஒன்றுமின்றுபொழியக காண்கின்றேன், இதுவென? என்னப்பனே, இவ்வியல்பினதாகிய காட்சியைச காண்டற்கும் அடியேறகு எய்ப்புளதாயிற்று. இவ்வெய்ப்பினுல, அடியேன் ஒரோவிடத்து எனக்கு நல்லியல்பு என்று தோன்ற எனனிடத்துள வாகியும அளவினுற் சிறியவாகியும் உள்ள என்னியல் புகளையே எனதவாமிகுதியாற பெருக்கித் தொகுத்து அத்தொகுதியையே குறியாககி அதனையே அடையமுயன்று, அது கைகூடாமை என்னைக் கடந்துநிற்றலின, அதற்குக் கடவுள் என்றோ பெயரிட்டு, அதனையே மீட்டும் அவாவிநிறறலை அனபென்றும, அதன் பொருட்டு முயலும முயற்சியை வழிபாடென்றும், அதன்கண் நிகழ்நததாகக கருதும் இன்பத்தையே உண்மையின்பமென்றும நினைததேயன்றி நிகழ்ந்த தொன்றில்லைபோலுமென றெண்ணுவேன், இங்ஙனம் அடியேன் எண்ணும எண்ணஙகட்கெல்லையில்லை. இஙஙனம அடியேற கடிமைத் திறமின்மையின், நம்மை நோககி ஒன்று கூறுமபொழுது அடியேனை "அடியேன்" என்று கூறிககொளளவும அடியேறகு வெட்கமாயிருக்கின்றது ; அடியேனுககுள்ள இன்னேரன்ன தன்மைகளை அருட்பிழமபாகிய உம்மிடத்

நம்மை அவ்வாறே விளங்கிக் கொள்கின்றார்கள் ; அவ்வாறே நமபுகின்றார்கள் ; வழிபடுதலும் செய்கின்றார்கள். அவ்வழிபாட்டை யெல்லாம அடிகளே ஏற்றுக்கொண்டு அவர்க்கருள்செய்கின்றீர் என அறிஞா பலரும் அறிந்து கூறுகின்றனா : அதனை அடியேனும நமபுகின்றேன். ஆயினும அடிகளா அவருக்கு அருள்செய்யும திறமும அவரவா தகுதிநோக்கி வேறுபடும என்பது கேட்டு, அடியேன துள்ளம அடியேன்மேல் வைத்த அன்பு மிகுதியால, மிகவும் வருந்துகின்றது.

' நம்மை உணர விரும்பும் அடியேனது தகுதி யிதுவா மெனபதூஉம, அத்தகுதிநோக்கி அடிகளா அடியேற்கு விளங்குமா றிதுவென்பதூஉம், அதனை அடியேனும நமது திருவருளால் விளஙகிக்கொளளுமா றிதுவென்பதூஉம அதனை அடியேன நம்புமா றிதுவென்பதூஉம், வழிபடுமா றிதுவெனபதூஉம் அவ்வழிபாட்டினை அடிகள் ஏற்குமா றிதுவென்பதூஉம், அதற்கேற்ப அருள் செய்யுமா றிதுவென்பதூஉம், அடிகளே நன்கறிவீர். அடிகளா தின்னருளின்றி அடியேன் அவற்றுள் யாதும அறியகில்லேன். இவ்வுண்மையை அடியேன் நமதின்னருளால் ஓரோவிடத்து வாய்த்துழி வாய்த்துழி அறிவதும் அதனால் ஆம இன்பம் ஒரு சிறிதே நுகர்வதும் விடுவதுமேயன்றி எப்பொழுதும இடையீடின்றி அறிந்ததும் நுகர்நததும் இல்லை.

நமது அடியார்களெல்லாம் நமது இன்னருளைப் பெற்றும் பெறார்போல் மயர்ந்தும் அயர்ந்தும் நமது இன்னருள் நோக்கிக் கிடப்ப அடியேன் ஒருவனுமே இப்பால், நம தின்னருள் பெருமை அறியாது அதுபற்றி நாணுதலுமின்றி நெஞ்சா னினையுமா றெல்லாம் நினைந்து வாயில் வந்தவாறெல்லாம் வாளா பிதற்றுகின்றேன். இப்பிதற்றுரையால் விளைவன இவையென ஒன்றுந் தெரியகில்லேன், வாய் மூடி வாளாவிருக்கவுங் கில்லேன். என் அப்பனே! இதற்கு அடியனேன் என் செய்வது? இன்னும் அடியேன் அடிகளை வேண்டிக்கோட லொன்றுளது —

அடியேன் நினைப்பும் சொல்லும் செய்கையும் ஆகிய இவை முழுவதும் நமக்கே ஆக்கி, அடியேற்கு மெய்ப்பொருள் தேற்றி, அடியேனும் நமது பணியாக அதனை அடியேனொத்த மக்கட் பிறப்பினர் பலர்க்கும் தேற்றி இருவேமும் நல்வழிப்பட் டுய்தி கூடுமா றின்னருள் புரிதல் என்னும் இதுவேயாம்.

"வேண்டத் தக்க தறிவோய் நீ,
வேண்ட முழுதுந் தருவோய் நீ—
வேண்டு மயன்மாற் கரியோய் நீ,
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்,
வேண்டி நீயா தருள்செய் தாய்
யானு மதுவே வேண்டி னல்லால்,
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்,
அதுவு முன்றன் விருப்பன்றே."

# நெஞ்சறிவுறுத்தல்.



நெஞ்சமே,

நாம் இவ்வுலகத்திற்கு வந்து பல ஆண்டுகள் கழிந்தன. கழிந்தும் நமக்கு முன்னும் தெரியவில்லை, பின்னும் தெரியவில்லை, இடைநிற்பதும்தெரியவில்லை. அதாவது, நாம் இப்பிறப்பிற்கு முன் இவ்வாறிருந் தோமென்றுவது, இதற்குப்பின் இவ்வாறிருப்போ மென்றுவது, இப்பிறப்புத்தான் இன்ன இயல்புடையது என்றுவது ஒரு சிறிதும் அறிந்தோமில்லை. எல்லாம் கண்ணைக்கட்டிக் காட்டில் விட்டாற்போலவே காணப்படுகின்றன.

இப்பிறப்பிலே உள்ள நன்மை இன்னதென நமக்கு நன்றாகப்புலப்படவில்லை. நன்மை இன்னது தீமை இன்னது என்று தெரிந்துகொள்வதே முதலில் மிகவும் அரிதாய் இருக்கின்றது. நன்மை யென்பது நமக்கு இன்பந் தருவதேயாம் என்று சிலர் அல்லது பலர் சொல்லுகின்றார்கள். இன்பந்தருவதையே நன்மையாம என்று கொள்வோமாயின்; ஒருபொழுது இன்பந்தந்தது மற்றொருபொழுது துன்பந்தருகின்றது. அதனால் அதனை நன்மையேயாமென நம்ப முடியவில்லை. இவ்வாறே, ஒரு பொழுது துன்பந் தந்தது. மற்றொரு பொழுது இன்பந்தருகின்றது. அதனால் அதனைத் தீமையே யாமென்று தீர்க்கமுடிய

வில்லை. அவ்வப்போது இன்பந்தருவதையே, அவ்வப்போது நன்மையெனக் கொள்வோமெனின், நன்மை தீமை எனனும் பாகுபாடு வேண்டுவதின்றே. அன்றியும் இன்பம் இன்னது துன்பம் இன்னது என்று தெரிந்துகொள்வதுமே மிகவும் அரிதாயிருக்கின்றது. ஒருபொழுது அறியாமையும் இன்பந்தருகின்றது, மற்றொருபொழுது அறிவும் இன்பந்தருகின்றது. அப்படியே, அறியாமையும் துன்பந்தருகின்றது, அறிவும் துன்பந் தருகின்றது. அறியாமையும் இன்பந்தருவதன்மையாயின், அதை நுகர்வதும் அவ்வறியாமையேயன்று, அறிவேயாம். ஆதலால் அறிவு அவ்வறியாமையையும் விரும்புகின்றதுபோலும். ஒன்றையறியாதபொழுது அதனாற் பெறபபடும் இன்பம் அவ்வறிவிற்கு இல்லா தொழிதலாற் பின், அதனை அறிந்தோமில்லையே என்று எண்ணி அதுவே வருந்துதலால், அறிவு அறிதலையும் விருமபுகின்றது. இஙஙனம் அறிவு, அறியாமையையும அறிதலையும் ஒருங்கே அவாவி நிற்றலால, அதற் கறிவுவடிவாகவே நிற்றல் பொருந்தாது கொல்லோ? என்று ஐயுறுவதற்கும் ஒரு சிறிதே இடநதருகின்றது. மேலும் அது, ஒருபொழுதறிந்ததை மற்றொரு பொழுதறியாதொழிகின்றது; ஒரு பொழுதறியாததை மற்றொருபொழுதறிகின்றது. ஒன்றைப் பொருந்தி யறிகின்றது, அதினின்றும் மற்றொன்றை அதனோடு பொருந்தவுய்த்தறிகின்றது, இன்னொன்றைக் கேட்டறிந்து அதனைத் தான் அறிந்தவாறே அறிந்துகொள்கின்றது. ஒன்றை ஒட்டியறியும்போதே அதனை, வெட்டி

வேறொன்றும் அதிலேயே வைத்து அறிந்துகொள்கின்றது; எதையும் விட்டுவிட்டறிகின்றது, எங்கும் என்றும் அறிந்தாங்கு அறிகின்றிலது. இதனால் அதற்கின்பம் என்பதும் துன்பம் என்பதும் அதற்குள்ளேயே நிலையுடையவாகத் தெரியவில்லை. இனிப் புறத்தும் அதுவே போலும்!! ஆயின் அதற்கு இன்பம் என்பது யாது? துன்பம் என்பது யாது? என ஒன்று தெளிந்து கூறுதல் மிகவும் அரிதாயிருக்கின்றது. இதனாற்போலும் அதற்கு நன்மை இது தீமை இது எனவும், ஒன்றுந்தெரிந்துகொள்ளமுடியவில்லை. இதுபற்றி வினவுதற்குரியவாகிய வினாக்கள் பலவுள. அவையனைத்தையும் ஈண்டே வினவி விடையிறுத்தற்கிவ்விதழ் இடந்தராமையாலும், தரினும் மிகவும் விரியுமாதலாலும், விரிப்பினும் அவ் வறிவிற்பயிற்சியொன்றே தம்வாழ்க்கையாக் கொண்டார்க்கன்றி மற்றையோர்க்குப் பயன்படாமையானும் இவ்விடத்திற்கேற்ப ஒன்று கூறுதும் கேள்.

இவையும் இவைபோல்வன பிறவும் நமக்கு நன்கு விளங்காதனவும், ஒன்றுந் தெரியாதனவுமாகப் பலவுள. அவையெல்லாம் அறிஞர்களால் இதுவரையும் இனிமேலுமாக ஆராயப்பட்டனவும் படுகின்றனவும் படுவனவுமாக உணரப்படும். அவையனைத்தையும் கடைபோகக்கண்டுண்மையுணர்ந்து நம்மில்வைத்து நமக்கு நாமே தெளிந்து கொண்ட பின்னரே ஒன்றை நம்பி அதன்மேற் செல்லுதுமெனின், இவ்வுடம்பொடுபட்ட நம் வாழ்நா ளவ்

வுண்மையாராய்ச்சிக்குப் போதாது; உணர்தற்குரிய உண்மைப்பொருளின் இயல்புகட்கோ எல்லையில்லை. உணரும் உணர்வோ எல்லையுடையது; ஆகவே, அவ்வுண்மைப் பொருளியல்பென்னும் ஆழியுள், மிகவும் ஆழ்ந்து சென்று, அதனை எவ்வளவாகத்தான் அமுக்கி முகப்பினும் அது கொள்ளுதற்கு ஒல்லும் அளவே கொள்ளுவதன்றி ஒருபொழுதும் மிகுதியாகக் கொள்ளாது. இதனால் ஒன்றை உணரற்க, ஆராயற்க, தெளியற்க என்று கூறுவாமல்லம். இவ்வுடம்பழியினும் உயிரழியாதாகலானும், அதனோடுடனுறையும் உணர்வும் அதுவேயாகலானும் இவ்வுடம்பிடைப் பட்ட நம் வாழ்நாட்கு இரங்கி அஞ்சி எஃதானுமொன்றை நாமே உணராமலும் புணராமலும் வாளா நம்பி, அதன்மேற் சென்று, அதனைப் பற்றிக்கிடப்பதெற்றுக்கென வினவுதியாயின், அஃதொக்கும், ஆயினும் என் னருமை நெஞ்சமே! இவ்விடத்தே நீ உணமையிற் றவறியதொன்றில்லையாயினும், யாம்முற் கூறியவாறு நீ எதனால் அவ்வுண்மைப் பொருளியல்பை அளக்க நினைக்கின்றாயோ, அவ்வளவினியல்பையும் ஈண்டே, அதுகொண்டே, உய்த்துணர்ந்து கொண்டா யில்லை. மேலும் இவ்வாழ்க்கையும் இவ்வாழ்க்கைக்கு முன்னும் பின்னும் இவ்வியல்பினவாமென ஒன்றுந்தெரியாத நமக்கு அம்மூன்றுந் தெரியவல்லார்க்குரிய துணிவு பொருத்தமுடைய தாகுமா? என்றதனையும் ஓர்த்துணர்ந்தாயல்லை; நம்மை நாமே நமக்கு மேலாக எண்ணிக்கொள்வது கனவேயன்றி நனவல்லவே; அன்றியும்,இனிவரக்கடவதாகிய

உண்மையுணர்ச்சியுமின்றி உடமபட்டு நம்பிக்கொள் ளத் தகுவனவும் உளவோ அன்றே? இனி வரக்கடவ தொன்று குறியாமலே, இப்பொழுதே, யாதோரா ராய்ச்சியுமின்றி, ஒரு தலையாகவே நாம் நம்பி நடந்து கொள்ள தொன்றுமிலலையா? நாம் உளேம் என்னும் நம்மை நாமே நம்பவில்லையா? இவ் வாழ்க்கையின் பின்னும் வாழ்க்கை உளவாகலாம், அவற்றில உண் மையுணர்ச்சி கைகூடலாமெனச் சிறிதுமுன் நீயே சிறிது நம்பினமை தோன்ற யாம் உனக்குரையாட வில்லையா? நம்பிக்கை, ஆராய்ச்சிக்கு முன்னுமுண்டு, பின்னுமுண்டு, "உன்றலே மீனறலே எண்பலமென்றல் அதனை அறுத்து நிறுப்போ ரொருத்தரு" முண்டோ? "நம்பிக்கை விட்டார்க்கு நமபிக்கை தூக்கற்கெவ், வூறறுக்கோ றேடலுறும்" என்ற மேனுட்டுப் புலவ னும் உளன். ஆகலின், என் கருவிழியனையாய்! "பாழிற் சமயப் படுகுழியில் வீழாமலூழி, 'லு'னைக் காத்துத" வுமாறிதுகூறுதுங்கேள்:—

" ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிருவுயா செல்வமெல்
[லாம்
அன்றென்றிரு பசிததோர் முகம்பார் நல்லறமு நட்பும்
நன்றென்றிரு நடு நீஙகாமலே நமக்கிட்டபடி
யென்றென்றிரு மனமே புனக்குபதேசமிதே "



# பத்திரிகைகள்

## அல்லது

# புத்தகங்கள்.



உலகம் தன்னைப் படைத்த முதல்வனது கடவுட் கருத்தின் படியேடுபோலும்; மக்கள் உள்ளத்தே உளவாய மக்கட் கருத்து அவ்வுலகத்தின் படியேடு போலும்; மக்கள் உரைக்கும் சொற்கள் அம்மக்கட் கருத்தின் படியேடு போலும்; மக்கள் எழுதுவன அல்லது அச்சிடுவன அசசொற்களின் படியேடு போலும் என அறிஞர் கூறுவர்.

கடவுள் தம் கடவுட் கருத்தைத் தாம் படைத் தருளிய உலகத்திலே அமைத்து வெளிப்படுத் தருளு தல்போல, மக்களும் தம் மக்கட்கருத்தை இக் காளிலே, பெரும்பாலும் காகிதத்திலே எழுதி, அல் லது அச்சிட்டு வெளியிடுகின்றார்கள்.

இவ்வா றச்சிட்டு வெளியிடுதலால், கடவுட் கருத்து இவ்வுலகுள்ளளவும் இவ்வுலகத்திலே பதிந்து நிற்றல்போல, மக்கட் கருத்தும் இவ்வுலகம் அறவே அழிந் தொழியும் வரையும் தாம் அழியாமற் பத்திரி கைகளிலும் புத்தகங்களிலும் பதிந்து கிடத்தல் கூடும்.

மக்கட் கருத்து கடவுட் கருத்துப்போலன்றி, அம்மக்கள் உள்ளத்தே தோன்றி மறையும் இயல்புடையவாம்.

மக்கட் கருத்தை அங்ஙனம் மறையவிடாமல் நிலைபெறுத்துதற்கும், மக்கள் யாக்கை அழியினும் தாம் அழியாத நிலைபேறுடையவாக அவற்றைச் செய்தற்கும், மக்கள் பாரம்பரியமாகத் தத்தம் உரிமையிற்பெற்ற உடைமையின் வைத்து, ஆண்டு, அவற்றைப் பயன்படுத்திக் கோடற்கும், அதனுல் அவற்றைக் காலத்தின் கடைக்கூறளவும் கொண்டுய்த்தற்கும் ஏற்றநெறி, அங்ஙனம் பத்திரிகைகள் அல்லது புத்தகங்கள் அச்சிட்டு வெளிப்படுத்தலையன்றிப் பிறிதொன்றுண்டெனத் தோற்றவில்லை: உளதாயின், அது சில பொழுதைக்கே நிலைநின்றொழிவதாம். என்னை ?

பதுமைப் பதிட்டை சில காலத்திற்கே தாம். அதற்கோர் மாட மியற்றின், அம்மாடம் அதினும் சுருங்கிய காலத்ததாம். அம்மாடத்தைச் சித்திரிப்பின், அஃததனினும் மிகச் சுருங்கிய காலத்ததாம். ஆகவே இம்மூன்றும் நீட்டித்து நிற்பன அல்ல. ஆதலின் இவற்றை இயற்றினர் கருத்தும் நீட்டித்து நிற்பன அல்ல.

பதுமை முதலியவற்றைப் நோக்கப் பத்திரிகைகளும் புத்தகங்களும் நீட்டித்து நிற்பனவாக அங்ஙனம் கருதப்படுதற்குக் காரணம், அவை பலரால்

எழுதப்பட்டு அல்லது இயந்திரத்தால் அச்சிடப்பட்டு, ஒன்று பலவாய்ப் பெருகித், தத்தம் கருத்து வேறு படுதல் ஒரு சிறிது மின்றி இவ்வுலகெங்கும் பரவு தலே யாம்.

இங்ஙனம் பரவுதல், அவை இயற்றினார்க்குப் புகழுடம்பு கொடுத்து, அவரை என்றும் நிலைபெறச் செய்து, சிரஞ்சீவிகள் ஆக்குகின்றது. இவ்வுண்மை,

"என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்."

எனத் தேவர் குறளுக் கிறையனார் அருளிய திருப் பாசுரத்தால் இனிது விளங்கும்.

இனி, பதுமைமுதலிய வியற்றும் அம்மூவர்க்கும் இவ்விருவர்க்கும் வேறுபாடு வேறொன்றுண்டு.—அம் மூவர்க்கும் இம்மைக்குரிய பொருள் சம்பந்தப்பட்ட மட்டில் அதிக இலாபமும், இவர்க் கஃதின்மையும் உளவாகலாம். .

ஆயினும், இவர் அச்சிட்டு வெளிப்படுத்துவன வாகிய பத்திரிகைகளும் புத்தகங்களும் உயிர்க்குறுதி பயப்பனவாயின், இவர்க் கிம்மைக்குரிய பொருட்பே றில்லாதொழியினும், மறுமைக்குரிய அருட்பே றௗ தாதற்கண் யாதோ ரையமு மின்று. அல்லதூஉம் அருட்பே றுடையார்க்கு அப்பொருட்பேறு ஓர் பொருளாகத் தோற்றுதலும் இல்லை. என்னை? அரு

ளுடையார் எல்லாம் உடையராகலின், அவ்வருளும் பொருளும் ஆய இரண்டனையும் ஒப்பு நோக்கு முகத்தான் அருளுடையார் எல்லாம் உடையராதலும், அருளிலார் என்னுடையரேனும் இலராதலும இவ்விடத்திற்கேற்ப ஒரு சிறிதே விளக்கிக் காட்டுதும்:—

"பொருளல்லவரைப் பொருளாகசசெய்யும் பொருள்"

இல்லாதவர் ஒருகால் எளிதிற் பொருளுடையராதலும உண்டு. அருளில்லாதவர் அன்னர் அல்லர். அவர் எக்காலத்திலேனும் அருளுடையராதல் மிக அரிது.

"பொருளுடையான் கண்ணதே போகம்"

என்பவாயினும்,

"அறனும் அருளுடையான் கண்ணதே ஆகும்."

எனவும்,

"அறத்தான் வருவதே இன்பம்"

எனவும்,

"செல்வம் சகடக்கால் போல வரும்"

எனவும் வருதலாற் பொருள் நிலையாது; அது போலவே அதனால் வரும் இன்பமும் நிலையாது, அருள் நிலையுதல் உடையது. அதுபோலவே அதனால் வரும் இன்பமும் நிலைபேறுடையது; அருள் இன்பமே வடிவாயது, ஆகலின் அருளுடையார் அவ்வருளிற் பயிலுந்தோறும் இன்பமே அனுபவிப்பர் இதனை அவ்வருளுடையாரே நன்றாய் அறிவர்.

பொருள் அவ்வருளுக்கே உரியது. அது,

"ஈதற்குச செய்க பொருளை"

எனவும்,

"பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவா பேறும்"

எனவும் வருதலாற் பெறுதும். பொருளுடையார் அருளிலராயின், அவர் அப்பொருளால் அநுபவிப்பதுபோலத் தோற்றும் அவ்வின்பம் உண்மையில் இன்பமே அல்ல. இதனை அருள் இலராய் உள்ள பொருளுடையாரே நன்கறிவர். இவ்விருவரில் ஒருவரினும் படாத யாமா அவற்ற தன்மையை உள்ளபடி உணர்ந்துணர்த்தற்பாலம்? பொருளுடையார் பொருளுடையாராகத தோற்றினும் அருளிலராயின், அபபொருளாலாய பயன் கொள்ளாமையிற் பொருளில்லாதவரே ஆகின்றுர். அருளுடையார் பொருள் இல்லாதவராயினும் அப்பொருளாலாம் பயனையும், ஒரோவழி அப்பொருளையும் இம்மையிற் பெற்று, மறுமைக்கண்ணும் அவ்வருளும் இழத்தல் இலராய், அம்மறுமை இன்பமும் அவ்வருளில் பொருளுடையார் ஏக்கற்று நிற்பத் தாமே அநுபவிப்பவராய், அவ்விருமை இன்பத்திற்கும் அப்பாற்பட்டதாய்ச், சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய்ப், பிறராற் பெறுதற்கரிய ஆன்மலாபம் எனப்படும் பேரின்பத்தையும் பெறுகின்றனர். ஆகலின் அவ்வருட்பே றுடையார் தாம் பெற்ற அவ்வருளைப் பயன்படுத்துப்த்தற்பொருட்டேயன்றி, அப்பொருட்பேற்றைத் தனியே வைதது, ஓர் பொருட்படுத்து

தல் இல்லை என்றே துணிக. இதுகாறுங் கூறியவாற்றால் அவ்வருளுடையார் எல்லாம் உடையர் என்பதூஉம், அருளிலார் என்னுடையரேனும் இலர் என்பதூஉம் ஒரு சிறிதாயினும் விளங்கும் என்றே எண்ணுகின்றோம்.

இனி, பத்திரிகை அல்லது புத்தகம் எழுதி வெளியிடல் பல்லாற்றானும் மக்கள் அறநெறி சேர்தற் பொருட்டேயன்றி வேறன்று. அஃதன்னதாதல்,

"அறநெறி சேர்தற்குச் செய்க பெருநூலை"
"யாதும் அருள்புரிந்து சொல்லுக சொல்லை"

என்பவற்றாற்பெறப்படும். மற்று அவை தாம் ஓரிடத்திற்கே, ஒரு காலத்திற்கே உரியவாதலின்றி, இவ்வுலகெங்கும்பரவி, என்றென்றும் நிலையுதல் உண்மையின் அவற்றை இயற்றி வெளியிடுவோர் அவை செய்தற்கண்ணே எவ்வளவு கவனம் செலுத்துதல் வேண்டும் என்பதனை அவர் தமக்குத் தாமே ஆராய்ந் தறிதல் நலம், என்னை?

நல்லறிவும், நன்னெறியும், நல்லொழுக்கமும் பேணுவாரோர் அருளாளன் உலகறிய ஒன்றெழுதி வெளியிடுவனாயின், அதிலே யாதோர் குற்றமும் படாதொழிதலே நன்றாம். என்னை? அன்றாயின், அக்குற்றம் அவனளவிலே நின்று, அவனொழியும்போதவனோடொழிதலின்றி, அவனெழுதி வெளியிட்ட அப்பத்திரிகை அல்லது புத்தகத்திலே நிலைநின்று, அவை ஒன்று பலவாய்ச் செல்லுமிடமெல்லாம் தா

னும் உடன் சென்று பரவித் தன்னைக் காண்போர் கண்ணையும், படிப்போர் வாயையும், கேட்போர் செவியையும், நினைப்போர் நெஞ்சையும், தன்னிறந் தேற்றிக் குற்றப்படுத்தி, அவரையும், அவர்க்குப்பின் வர நிற்கும் அவர் சந்ததியாரையும் தொடர்ந்து, அத் தீமைக்குட்படுத்துதலாகிய பெரும்பாவத்தையும் எக் காலத்தும் செய்து நிற்றலின், அவன் தான் உயிர் வாழும் அக்காலத்தார்க்கும், தன் வாழ்நாளறியாப் பிற்காலத்தார்க்கும் தொடர்ந்துவிடாத் தொற்று வியாதிபோலவும் படர்ந்தும் விடாப் பகைபோலவும் நின்று, அவரையெல்லாம் அல்லற்படுத்தி, அவரால் வெறுத்தேசவும் படுவானன்றோ? ஆகலின் என்க.

ஆகவே இவ்வுண்மையுணராமலும், உணர விருப் பந்தானுமில்லாமலும், மனம்போனவாறே உயிர்க் குறுதிதருதல் ஒல்லாப் பலவற்றை எழுதி வெளியிட் டிடல் நன்றன்று. அங்ஙனம் யாதோர் குற்றமும் படாமல் நன்றுணர்ந் தெழுதுதலே, யாமே தனிநின் றியற்றவல்லேமென் றெண்ணி இஃதொன்று தொ டங்குகின்றிலம். ஆதலின், அவ்வாற்றலுடையராம் பெரியாரனைவரும் கருணைகூர்ந்து, தத்தமவகாசத்திற் கேற்ப இப்பத்திரிகைக்கு அடிக்கடி விஷயதானம் செய்துவரும்படி மிகவும் வணக்கமாய் வேண்டுகின் றேம்.

நன்றெண்ணுதலும், நன்றுரைத்தலும், நன்றி யற்றலும், நன்றும் இன்றேயியற்றலும், இன்றும் இன் னே இயற்றலும் இயல்பிலே நமக்கென நம்மிடைறவ

னிட்ட பணியாம். அவ்விறைபணி நிற்றலே நமது கடமையாம். நம்மைத் தாங்கிக் கோடல் அவ்விறைவனது கடமையாம். அக்கடமை செய்தற்குப் பயனாக அவன் நமக்குச் செய்வதியாது என விசாரித்தற்கு நாம் யார்? இதனை நமது நண்பரெல்லாம் நன்கு சிந்திக்க விரும்புகின்றோம். யாமும் அது.

திருச்சிற்றம்பலம்.

"நன்கடம்பனைப் பெற்றவள்பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக்கோயிலான்
தன்கடனடி யேனையுந் தாங்குதல்
என்கடன் பணி செய்துகிடப்பதே."

திருச்சிற்றம்பலம்.

# அறிவும், நம்பிக்கையும்.



நம்மவராகிய சைவர்களிற் சிலர் நமது சைவ சமய உண்மைகளை ஆராய்ச்சிசெய்தற்கு உண்மையிலேயே அஞ்சுகின்றார்கள் என்று நினைக்கின்றோம். சமய உண்மைகள் அல்லது அவற்றைப் பற்றிய நம்பிக்கை, அசைவுறும் அல்லது வேரற்றழியும் என்று நினைந்து பதறுகின்றார்கள்; எல்லாவற்றையும், ஒன்றும் நினையாது, ஒன்றும் வினவாது முழுவதும் நம்பியிருத்தலே நன்றென்று நினைக்கின்றார்கள்; நினைக்கட்டும், ஆனால் அப்படி நினைக்கும் அவர்களாவது அவ்வாறு நம்பியிருப்பதாக, அவர்களுடைய வாழ்க்கைகள் எமக்குத் தெரிவிக்கவில்லை. உண்மைகள் உள்ளபடியே உண்மைகளாயின், அவைகட்கு ஒருபொழுதும், ஒன்றாலும் அசைவும் இல்லை, அழிவும் இல்லையென்பதை மாத்திரம், அவர்களால் நம்பமுடியாதுபோலும்! "வினைதல, வினையவை விடுத்தல் என்றிவை, கடனுக்கொளினே மடநனி இகக்கும்" என்பதை அவர்கள் நம்புவதாக எமக்குத் தோன்றவில்லை. நம்பிக்கைக்கும் அறிவுக்கும் வெகுதூரம் என்று நினைக்கின்றார்கள்போலும்! நம்புதல் நம்பாமை ஆகிய இரண்டு செயல்கட்கும் விளைமுதல் அறிவேயாம் என்று எமக்குத் தோற்றுகின்றது அறிவு ஒன்றை நம்புதற்குக் காரணம் அதனை அவ்வறிவு அறிதலே

ஆம், நம்பாமைக்குக் காரணம் அதனை அறிதலும் ஆம், அறியாமையும் ஆம். ஒன்றை உள்ளபடி அறிந்து, நம்பிய ஒருவனை அந்நம்பிக்கையினின்றும் எப்படி ஒரு வழியாலும் அசைக்கமுடியாதோ அப்படியே ஒன்றனியல்பை உள்ளபடி அறிந்து, அதனை நம்பாது கைவிட்ட ஒருவனையும் அசைக்கவே முடியாது. அறியாமையினால் ஒன்றை நம்பமாட்டாத ஒருவனை, அறிவித்தே நமபும்படி செய்தல்வேண்டும். இப்படியே, ஒன்றை ஐயுற்று, நம்பியும் நம்பாமலும் தடுமாறுகின்றவனையும் அவ்வையுறவு தீர்த்துத் தெருட்டியே, முழுதும் நம்பும்படி செய்தல்வேண்டும. இங்கேசொல்லிய வழியாலன்றி, ஒன்றைப்பற்றி யாதோரறிவுமின்றி அதனை மாந்தர் நம்புகின்றார் என்பதை எம்மால் நம்ப முடியவில்லை. அறிவும் நம்பிக்கையும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திருக்கும் நிலையை எம்மால் நினைக்கமுடியவில்லை. அறியாமலே ஒன்றை ஒருவன் நம்பினால் அந்நம்பிக்கை அவனிடத்தில் எவ்வளவு நாள் நிலைக்குமோ, நிலைத்தால் என்ன தன்மையோடு இருக்குமோ, அவற்றை எம்மால் அறியமுடியவில்லை. காண்டல், கருதல், உரை என்னும் இம்மூன்றனுள் ஒன்றும் பலவும் பற்றி ஒருவன் ஒன்றை உணர்ந்த பின்பே அதை நம்புகின்றான். ஒரு சிறிதும் உணராமலே ஒன்றை நம்பினான் என்னும் வரலாறு கேட்கப் படவில்லை. காட்சி முதலியவற்றால் வந்த உணர்ச்சியையும் பலபடியாலும் ஆராய்ந்து தெளிந்தே அதனை முழுதும் நம்புகின்றான். அங்ஙனம் ஆராய்ந்து தெளியும் வழியிலே அவனுக்குப் பலவினைக்கள் நிகழ்கின்

றன. இவ்வாறு நிகழ்தல் புதுமையல்லவே! ஒன்றுங் கருதாது சும்மா உண்பதும உறங்குவதுமே தன் வாழ்க்கையாக்கொண்ட ஒருவனையும்,ஒன்றைச்சிறிது கருதிப் பின் கருதாதொழிபவனையும் கருதுவிக்கவும, உற்றுநோக்குமபடி செய்யவும், அதனாற் றெளிவிக்க வும் வேண்டின், அவனைப பலவகையாலும் ஒழுங்கு பெற வினவியே அவற்றைச் செய்து முடிப்பதல்லது, வேறுவழியால் அவற்றைச் செய்தல் அவ்வளவு நன் மைதருமு என்று எம்மால் நமபமுடியவில்லை. நம் முடைய அறிவு அறிவித்தால் அறிவதொன்றெனக் கருதப்படினும், தான் அறிவதற்கும் வேறொன்றை வேண்டாமல தானே அறிந்து கொள்கின்றது. அங்ஙனம அறியும் அதுதான் அறிதற்கென்று வேறொன்றை வேண்டுமாயின் எவ்வளவிலே எவ்வாறு வேண்டிநிற்கும் என்பதை நமக்கு நாமே அறிந்து கொள்ளலாமல்லவா? இங்ஙனமாகவும், நம்மவர் சிலர் சமயநெறிபற்றித் தமக்குத் தாமே ஒன்றை நினைக்க வும் அதை வெளியிடவும் அஞ்சுகின்றார்களே! அவ் வாறு நினைப்பவர்களையும், வெளியிடுபவர்களையும், அதுபற்றித் தாமே தெளிந்துகொள்ள வேண்டியோ அல்லது பிறரைத் தெளிக்கவேண்டியோ வினவுபவர் களையும், விடை கூறுபவர்களையும, ஆராய்பவர்களை யும் தமக்குப் பகைவர்களாக எண்ணி அவர்களைச் சீறவும், ஏசவும், துணிகின்றார்களே! இது வென்!.

இப்படிப்பட்ட இவர்கள் தாமா உயிர்களிடத் திலும், அவ்வுயிர்கட்கு அம்மையப்பராயுள்ள கடவு ளிடத்திலும், அக்கடவுள் தம்மக்களாகிய உயிர்கட்

குத் தந்தருளுகின்ற திருவருளினும், அத்திருவரு ளெனறியென்று அறிந்தே அறிஞர்களால் நமபபபடு கின்ற சைவசமயத்திலும் அன்பும் நம்பிக்கையுமுடை யவர்களா? நன்று! நன்று!! ஐயையோ இதற்கென் செய்யலாம். சிவதா!! சிவதா!!!

---

# அன்பும், அறமும்.

---

உடம்பும் வேறு, உயிரும் வேறு. இவ்வுண்மை, உண்மை உணர்வுடையார் அனைவர்க்கும் உடன்பா டாம், ஆதலின் அதனை இங்கே ஐயுறுதலவேண்டா. உடம்பு அழிதன்மாலைத்து; ஆதலின் உடமபுக்கும் உயிர்க்கும் உள்ள தொடாபு நிலையுடையதன்று அது போலவே, அவ்வுடம்புபற்றி வநத உற்றார் பெற் றா உறவின் முறையாரது தொடர்பும் நிலையுடைய தன்றும். உயிர், தன்பொருட்டே, தன் ஒதுக்கிட மாகிய உடம்பையும் பேணும்; அவ்வுடமபு பறறி நேரும் உற்றார் முதலியோரையும் பேணுமு. உடம் பும், அவ்வுயிர் அன்பு முதலிய நற்பண்பெய்தி இன் புறுதற் பொருட்டே இறைவனால் அருளப்பட்ட தொன்றும்; ஆதலின் அதுபற்றி அவ்வுயிர் தன் உடம்பைப் பேணுதல் குற்றமாகாது, அறமேயா யிற்று; அதுபோலவே, அவ்வுடம்பு பற்றிவந்த உற்றார் முதலியோரைப் பேணுதலும் குற்றமாகாது,

அறமேயாம், ஆயினும் அவ்வறம் உயிரோடுளதாய் அவ்வுயிர்க்கே உறுதிசெய்கின்றது; உடம்போ அவ்வுயிர் அவ்வறத்தை எய்துந்துணையும் துணைசெய்து அதன்பின் அவ்வுயிரைவிட்டு நீங்குகின்றது; அது போலவே, அவ்வுடம்புபற்றி வந்த உற்றார் முதலியோரும் அவ்வுயிர்க் கன்பும் அறமும் எய்துவித் தொழிகின்றனர். உடம்புபற்றி வந்த உறவும் இவ்வாறொழியவே அவ்வுயிர்க்குத் தொடர்பு அவ்வன்பும், அதன் பயனாகிய அறமுமே போலும். அற்றன்று, அவ்வறம் நுகர்ந்தகழியும் அவ்வன்பு யாதானும் ஒன்றைப்பற்றும். நுகர்ந்தகழியும் அறமும் அதன் பயனும் நிலையுடையன அல்ல. யாதானும் ஒன்றைப் பற்றும் அன்பு முன் பழகிய பழக்கத்தால் மீட்டும் உடம்பைப் பற்றிப் பிறவிக்கேது வாய்க் கொள்ளிவட்டமும் காற்றாடியும் போல் அவ்வுயிரைக் கொட்புறச்செய்து இடும்பை எய்துவிக்கும். ஆதலின் அங்ஙனம் பிறவியுட்பட்டு, இடும்பை யெய்தாது, இன்புறல் வேண்டும். உயிர்தான உடம்போடும் உறவோடும் நின்று எய்திய அன்பையும் அறத்தையும் தனக்கவற்றை உடம்பு முதலியவற்றால் எய்துவித் தின்புறுத்திய பரமோபகாரியாகிய தன் தலைவனை அவ்வுடம்பு முதலியவற்றிலும் தன்னிலும் கண்டு தன்னையும், தன்னிடத்துளவாகிய அன்பும் அறமுமாகிய அவற்றையும் அவனுடைமை யாகவே கண்டு அவனிடத்தே தானே ஒப்புவித்தங்கே தானே அடங்கி விடுதல் வேண்டும். அதுவே போலும் அவ்வுயிர்க்கிதமாவது.

# "இணக்கமறிந் திணங்கு"



"இணக்கமறிந்திணங்கு" என்னுந் திருவாக்கையும்

> "வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்
> திணங்கத்தன் சீரடியார் கூட்டமுமவைத் தெம்பெரு
> [மான்
> அணங்கொடணிதில்லை யம்பலத்தே யாடுகின்ற
> குணங்கூரப் பாடி நாம் பூவல்லி கொய்யாமோ."

என்னும் திருவாசகத்தையும் ஒப்புநோக்கினால் இணங்குதற்குரிய இணக்கமின்னதென்றறியலாம்.

இது பற்றியே,

> "அடியாருறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப்
> படிமீது வேறு பயனுளதோ"

என்றும் பிறவாற்றானும் பெரியார் பலருங் கூறியருளினர்.

அடியாருறவைத தவிர வேறுறவாற் பயனில்லை என்பதன் நோக்கென்ன? மற்றையுறவெல்லாம் சுருங்கக்கூறிற் பிறவிக்கே காரணமாம். அடியாருறவோ அன்னதன்று, பிறவி நீக்கத்திற்கே காரணமாம். பிறவி, நீக்கத்தைத் தவிர இப்பிறவியாற் பெறப்படும் பயன் வேறொன்றுமில்லையென்னும் உண்மையுணரவல்லார்க்கு அடியாருறவைத் தவிர வேறுறவு உற

வாகவே தோற்றுதலில்லை; பகையாகவும் தோற்றும். என்னை? அவ்வுறவு தமக்குப் பழம்பகையாகிய பிறவி யைத் தருதலின் என்க. அங்ஙனமன்றி ஏனையுற வையும் உறவெனக் கொள்வராயின் அது தம் கொள்கையோ டிணங்காமையின் அவர் இணக்கமறி யாதவரே யாவர். அவரதிணக்கமு மிணக்கமன்றாம். இணக்கமாவது இறைவனது கழற்கீழ் வணக்கமே யாம். தலைமை பற்றித தலையும் வாயும் கூறினும் வணக்கத்தைப் புலப்படுத்தும் பிற உறுப்புகளும் பிற செய்கைகளும் உடன்கொள்ளப்படும். "வணங் கத் தலைவைத்தமை" முதலியன போலவே, "இணங் கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்" தருளிய வள் ளன்மை கூறவே, இணங்குதற்குரிய அடியார் கூட் டம் எப்பொழுதும் உண்டென்பதாயிற்று "இணக்க மறிந்து" என்றருளினமையால் அவ்விணக்கமுள்ள அடியாரை அறிந்துகொள்ளுதலும், "இணங்கு" என்றமையால், அவ்வாறவரை யறிந்துகொள்ளினும் அவரோடிணங்கும் பேறுபெறுதல் அதனினு மரி தென்பதூஉம் குறிப்பாற் பெறப்படும். படவே இணங்குதற்குரிய மனம் பெறினும் "இணக்கமறிந் திணங்கு" தல் அரிதென்றவாறாயிற்று. அம்மட்டோ? அங்ஙன மறிந் திணங்காவிடின் அதனால் சேரும் துன் பங்கள் சாலவும் பலஎன்பதாம். இன்னும் "இணங்கு" என்னும் அதனானே, இணக்கமறிந் திணங்கினும் அவ்விணக்க முள்ள அடியார்க்கு எவை இணக்கமா வனவோ அவற்றை அறிந்து அவற்றையே செய்து, அவர்க்கிணங்க ஒழுகுதல் மிகவும் அரிய செயலாம்

என்பதூஉம், அதுவே செயத்தகும் என்பதூஉம் பெறப்படும் போலும். உலகர்க்கும் அவர் தம் உலக நடையில் இணக்கமறிந் திணங்குதல் கூறவேண்டா; அவர் இணங்கியபிற் பிரிவுண்மையின் அப்பிரிவு "இணங்கு" என்பதனால் விலக்கப்பட்டது. இங்ஙனமன்றித் தம்மோடு பிணங்குவாருடனே இணங்குதல் இணக்கமன்றென்றவாறும். இவற்றை யெல்லா மறிந்தோ, அறியாமலேயோ, அடியர் வேடந்தரித்தோர்பலர், உலகரோடிணங்கி அவர்க்கேற்ப ஒழுகித் தம்மொழுக்கிறந்தும், உலகர் அடியரோடிணங்கி, அவர்க்கேற்ப ஒழுகுவார்போல் தம்மொழுக்கிறந் தவரொழுக்கிறப்பித்தும், இங்ஙனம் அங்குமன்றி இங்குமன்றிக் "கிடங்கிலுட்பட்ட கராவனை" யராயிருந்தொழிகின்றார்கள். இவர் கூட்டம் எவர்க்குமிணக்க மன்றும். இக்கூட்டமே இக்காலத்தே, எங்கும் பல்கி வருகின்றது. அக்காலத்தும் மற்றைக் காலத்தும் இஃதுண்டென்பதும் இவ்விதிச்சூத்திரங் கொண்டே ஊகித் துணரப்படும்போலும். ஆதலால் அறிவுடையோர், திருவருள் துணையாகத் தமக்கெஃ தினக்கமாவதோ, அஃதறிந்தே இணங்குவர்.

"தெருளார் கூட்டம் காட்டாயேற்
செத்தேபோனாற் சிரியாரோ?"

என்பது மணிவாசகமன்றோ?

---

# எம் இறைவரது திருமேனி.



எம் இறைவராகிய சிவபெருமான் அருவப்பொருளும் அல்லர்; உருவப்பொருளும் அல்லர்; அருவுருவப் பொருளும் அல்லர். அம் மூவகைப் பொருளும் எம் இறைவராகிய அவராலே படைக்கவும், காக்கவும், அழிக்கவும் படுதலால் அவ்வாறாகாத தாம் அவற்றுள் ஒன்றாதல் ஒருபொழுதும் இல்லை; ஆதலால் அம் மூவகை வடிவமும் அவர்க்கில்லையாம்; அவரது திருமேனி அம்மூவகை வடிவங்கட்கும் அப்பாற்பட்டதே யாதலவேண்டும் இவ்வுண்மையை, "சிவனருவுருவுமல்லன்" என்னுஞ் சுருதி பற்றியும் உணர்ந்து கொள்ளப்படும்.

இனி, அம் மூவகை வடிவஙகட்கும் அப்பாற்பட்ட தாகிய அவ் விறைவரது திருமேனியை அம் மூவகை வடிவங்களில் ஒன்றுபற்றி அறிவோம் என்றல் எங்ஙனம் கூடும்?

நமது உருவுடலின் கண்ணதாகிய அறிவும் தனக்குரிய விடயங்களைத்தானும் ஒவ்வொன்றுயறிவதன்றி ஒருஙகே யறியமாட்டாதே! ஒரு விடயத்தின் கண்ணும் விட்டுவிட் டறிவதன்றி இடையீடின்றி யறிய மாட்டாதே! அதுவும உறக்கமும், மூர்ச்சை முதலியவற்றிற் சிறிதும் இல்லையாய்விடுமே!

இவ்வாக்கையும் அதுவேயன்றே? ஆகவே, நிலையில்லாத இவ்வறிவைக்கொண்டு நிலையில்லாத இவ்வுருவுடலிலே நின்று, நிலையில்லாத வுருவுடலோடு ஏனை இரண்டற்கும் அப்பாற்பட்ட அவ்விறைவரது திருமேனியை நாம் எவ்வாறறிவது? இவ்வறிவினாலே அறிய முடியாமையைக் "கண்முதற்புலனாற் காட்சியுமில்லோன்" என்னும் சுருதிபற்றியும் உணர்ந்து கொள்ளப்படும்.

இவ்வாறே மனம், வாக்கு முதலியவற்றானும் உணர்ந்துரைத்தல் அரிதென்பது, "உள்ளத்துணர்ச்சியிற் கொள்ளவும்படாஅன்" "சொற்பதங்கடந்த தொல்லோன்" "நாலுணர்வுணரா நுண்ணியோன்" என வரும் சுருதிகளாற் பெறப்படும்.

இவ்வியல்பிலே நிலைபெறும் நம் மிறைவரது திருமேனி நம்மனோர்க்கு மாத்திரம் இத்தனை யரிதாகின்றது என்று கொள்ளற்க.

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்"

எனத் துணிந்தருளும் பெரும்பேறு பெற்று, அவ்விறைவரது திருவருட் கண்கொண்டு அவ்விறைவரது திருநடங் கும்பிடப் பெற்றுச், சிவமாந் தன்மைப் பெருவாழ்வு பெற்றுள்ள எம் "அம்மை யாருமே,

"அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் என்றுந்தான்

எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது"

என்றருளிச்செய்வராயின், நம்மிறைவரது திருமேனி யினியல்பறிந்து வழிபடுதற்கு, அவ்விறைவரது திருவருட்கண் ஒரு சிறிதாயினும் கைகூடப்பெறாத நாம் யார்? நாமும அத்திருமேனியினியல்பை யறிவோமென் றெழுதல் நகையே யன்றோ? அன்றியும்,

"ஆழ வமுக்கி முகப்பினும் ஆழ்கடலில்
நாழி முகவாது நானாழி"

என்றலால், நாம் எவ்விதத்தாற்றான் எத்தனையாகத்தான் முயன்றாலும், நம மறிவின சிறுமைக்கும் அவ்விறைவர் பெருமைக்கும் எவ்வளவு தூரம்?

ஆதலால், அவ்விறைவரே நமக்கு அருள் செய்தாலன்றி, அவ்விறைவரது திருமேனியியல்பை யுணர்தலும், அவ்வியல்புக் கேற்கும் வகையறிந்து அவரை வழிபடுதலும் நமக்கு ஏலாவாம். இவ்வுண்மை,

"காண்பாரார் கண்ணுதலார் காட்டாக்காலே"
"அவனருளாலே அவன்றாள் வணங்கி"

என்னுஞ் சுருதியால் உணர்ந்துகொள்ளப்படும். அன்றியும்,

"பண்ணேனுனக்கான பூசை; ஒரு வடிவிலே
பாவித்தி றைஞ்சவாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்

கண்ணேன் ; அயாமலிரு கைதான் குவிக்கவெனின்
நானுமென் னுள நிற்றீ;
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலா
லென்பூசை செய்யன் முறையோ?
விண்ணே விளைநியாம் பூதமே! நாதமே!
வேதமே! வேதாந் தமே!
மேதக்க கேள்வியே! கேள்வியாம் பூமிக்குள்
வித்தே! அவ்வித்தின் முளையே!
கண்ணே! கருத்தே! எனெண்ணே! எழுத்தே
கதிக்கான மோன வடிவே!
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே!"

என்னும் தாயுமானவரானும் அஃதினி துணர்ந்து கொள்ளப்படும்.

இவ்வாறு இறைவரது திருவருட்கண்கொண்டு காண்பதன்றி, நமது தற்போதத்தாலே முனைத்து நின்று காண்பேமாயின், நாம் எத்துணைக்காலந்தான் அங்ஙனம் முயன்றாலும் அவ்விறைவரது திருமேனியி னியல்பை ஒருவாற்றானும், ஒரு சிறிதாயினும், ஓர் மாத்திரைப் பொழுதாயினும் உணர்தல் செல்லாது. இவ்வுண்மையை,

" அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ் வண்ணத்தன்
இவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே."

எனவும்,

" திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்து
முறையுளியொற்றி முயன்றவர்க் கொளித்தும்

ஒற்றுமை கொண்டு நோக்குமுள்ளத்து
உற்றவர் வருந்த வுரைப்பவர்க்கொளித்து
மறைத்திற நோக்கி வருந்தினர்க்கொளித்தும்
இத்தந்திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந்திரத்தி லவ்வயினொளித்து
முனிவறநோக்கி நனிவரக் கெளவி
ஆணெனத்தோன்றி யலியெனப்பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயிராக்கை
யருந்தவர் காட்சியுட் டிருந்தவொளித்து
மொன்றுண்டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயிறொறும் இன்றே பயிறொறும்
ஒளிக்குஞ்சோரன் ”

எனவும் வரும் சுருதிகளாலும் உணர்ந்து கொள்ளப்படும். படவே அவ்விறைவரது திருவருளின்றி ஒன்றுமமையாது என்பது தெற்றெனவிளங்கும். அத்திருவருளும் அவ்விறைவரைச் சிந்தனை செய்தாலன்றி அமையாது. அது

“சிந்தனை உனக்குத் தந்தேன்
திருவருளெனக்குத் தந்தாய்”

என்னும் திருவாக்கா னறிக.

அச்சிந்தனையும் மனத்தாற் பற்றியன்றி யமையாது; மனத்திற்கும் பொருளிருந்தாலன்றிப் பற்றுதல் செல்லாது. பொருளும் எவ்வாற்றாலாவது அறியத்தக்கபொருளா யிருப்பினன்றி அதனை அறிவது

மில்லை; பற்றுதலும் இல்லை. அறிந்த பொருள் கொண்டு அறியாத பொருளைக் கருதியறிதுமெனின், அவ்வாறு அறியும் அறிவும் பாசத்தாற் கட்டுண்ட பசுவறிவேயாதலால் அப்பசு வறிவைக்கொண்டுபதிப் பொருளை அறிந்தோ மென்றெண்ணுதல் புல்லறி வாண்மையேயாம். அப்பதியின் அருளொளி கலந்தாலன்றி இப்பசுவறிவாகிய கண் அப்பதிப்பொருளைக் கண்டுகொள்ளுதல் ஒரு பொழுதும ஒருவாற்றானும் செல்லாது. இவ்வுண்மையெல்லாம் அறிவுநூல் பற்றி ஆராய்ந்து ஒருவகையாற் கண்டுகொள்ளப்படும். பின்னும் பிணங்கினவர்க் கிது கூறுதல்.

"காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான் கண்டவாறு"

என்பதற் கிலக்கியமாய் முடியும்.

இவ்வாறு இறைவன் நமதறிவிற்கு மிக அரியராயிருத்தலால், அவரை அறிய ஒருப்பட்ட நம்மறிவு, அவரது அருள்பெறுந் துணையும் அவ்விறைவரது உடைமையாகிய ஏனைப்பொருள்களை அறிந்து பழகிய அவ்வறிவாற்றல் கொண்டே, அவரையும் அறியவொருப்படுமேயன்றி வேறோரறிவாற்றல் புதுவதாய்த் தோன்றி, அதனால் அவ்விறைவரை யறிய ஒருப்படுதல் இல்லை. அவ்வாறறிந்த வழியிலன்றி, அதற்கு மேலாக ஓர் நெறிபற்றி அவ்விறைவரை வழிபடுதலும் அவ்வறிவிற் கியலாது. ஆகவே அவ்வறிவு அவ்விறைவழிபாட்டினைச் செய்ய வெழுங்கால், அவ்

விறைவரை அவர் படைத்தருளிய உலகத்தின் வைத்து வேறாக வேண்டுதல் கருதிப் பிரித்தறிதல் கூடுமாயினும், அதுவும் தான் பயின்ற அவ்வுலகத்தை யின்றி யமையாதாம்; அங்ஙனம் பிரித்தறியுமிடத் தும் அவ்வுலகத்திலமைந்த இறைவர் செயல்கண்டு அவ்விறைவரை எங்குமிருப்பவராகக் கண்டு வழிபடி னன்றி, அவ்விறைவர், தான் செய்யும் வழிபாட்டை உணர்ந்து அருள்செய்வர் என்று கொள்ளுதல் அத ற்கு இயலாதாம்; அவ்வாறு கொண்டாலன்றி அவ்வி றைவரிடத்தே அவ்வறிவுக்கு நம்பிக்கை பிறவாதாம்; ஆகவே அவ்வறிவு அவர் எங்குமிருத்தலை அறிதலும், நம்புதலும், வழிபடலும் வேண்டுதல் ஒருதலையாம்.

எங்குமிருத்தலாவது எங்கும் நிறைந்திருத்தல்; இவ்வாறு நிறைந்திருத்தல் கொண்டே இப்பிரபஞ் சத்தை அவ்வறிவு அவ்விறைவர்க்குத் திருமேனி யெனவும் வேண்டும்; என்னை? உடலின்கண் நிறைந் துள்ள உயிரைப் பொருட்டன்மை நோக்கி, அவ் வுடற்கு வேறாக வைத்துணரினும், அவ்வாறுணர்ந்த அதுவே மீட்டும் கலப்புத் தன்மை நோக்கி, அவ்வுட லையும் அவ்வுயிராகவறியும்; அதுபோலவே, இறை வனைப் பொருட்டன்மை நோக்கி இவ்வுலகின் வேறா யறிந்துகொண்ட அவ்வறிவே, மீட்டும் கலப்புநோக்கி அவ்வுலகையும் அவ்விறைவனாகவே அறிந்து வழி படற்கண் இழுக்கில்லை யென்றே கொள்ளப்படும். இன்னும் இவ்வுண்மையை உய்த்துணர்ந்து விரித் துரைத்துக்கொள்ளவும்படும். என்னை? யாதானு

மோர் கருத்து வகைபற்றி அங்ஙனம் வகைசெய்து கோடல் அறிவுடையோர்க் கியல்பாகலான்.

இவ்வாறுலகை இறைவற்குத் திருமேனியாகக் கொள்வார் அதனை எண்வகையாகப் பிரித்துக்கொள்வர். அது

"அவனே இருசுடர்தீ யாகாசமாவான்
அவனே புவிபுனல் காற்றுவான்—அவனே
இயமான னாயட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து"

எனவரும் சுருதியாற் றெளிந்துகொள்ளப்படும்.

இன்னும், அவ்விறைவன் கொள்ளும் திருமேனிகளை தாவரம் சங்கமம் என்னும் இவ்விரண்டில்லைத் துணரவும்படும். தாவரமாவன நிலையியற்பொருள்கள்; சங்கமமாவன இயங்கியற்பொருள்கள், தாவரத்துள்ளும் இலிங்கமும், சங்கமத்துள்ளும் குருவும் அடியவருமே சிறப்புடையவாகக் கொள்ளபபடும். படவே இவ்வகைபற்றி இறைவற்குத் திருவுரு மூன்றுதலும் அறிந்து கொள்ளப்படும். தாவரசங்கமங்களுள்ளும் சங்கமமே சிறப்புடையதாம். அது

"படமாடக் கோயிற் பரமர்க்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க் கங்காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயிற்
படமாடக் கோயிற் பரமர்க்கங் காமே"

என்னும் திருமந்திரத்தா லோர்ந் துணர்ந்துகொள்ளப்படும்.

இனி தாவரமும் அருவத்திருமேனியும், உருவத் திருமேனியும், அருவுருவத் திருமேனியும் என மூவகைப்பட்டு; அவற்றுள்ளும் சிறப்புச் சிறப்பின்மைகள் ஆராயப்படுதலும் உண்டு. அன்பொன்றே யுடையார்க் கவ்வாராய்ச்சியில்லை

அவற்றுள் உருவத்திருமேனி கரசரணாதி யவயவங்களுடையவாக உணரப்படினும், அவற்றினுள்ள அங்கப் பிரத்தியங்கசாங்க உபாங்கங்க ளெல்லாம் உணர்வுடையார்க்கு ஒவ்வோர் குறிப்புப் பொருளை உணர்த்தி நிற்பனவாம். இவ்வுண்மை தேறப்பெறாத பிறரெல்லாம் இவற்றை இகழ்ப; தேறித் தெளியப் பெற்றோர் புகழ்ப அதனை

"இவரைப் பொருளுணர மாட்டாதா ரெல்லாம்
இவரை இகழ்வதே கண்டீர் இவர் தமது
பூக்கோல மேனிப் பொடிபூசி யென்பணிந்த
பேய்க்கோலங் கண்டார் பிறர்"

எனவும்;

"தூமதி சடைமிசை சூடுதல் தூநெறி
யாமதி யானென அமைத்தவாறே
யறனுருவாகிய ஆனேறேறுதல்
இறைவன் யானென வியற்றுமாறே
அதுவவனவனென நின்றமையார்க்கும்
பொதுநிலையானென வுணர்த்தியபொருளே
முக்கணனென்பது முத்தீவேள்வியில்
தொக்கதென்னிடை யென்பதோர் சுருக்கே
வேதமான்மறி யேந்துதல் மற்றதன்
நாதனானென நவிற்றுமாறே

மூவிலைவொருதாட் சூலமேந்துதல்
மூவரும் யாமென மொழிந்தவாறே
யெண்வகைமூர்த்தி யென்பதிவ்வுலகினில்
உண்மையாமென உணர்த்தியவாறே
நிலநீர்தீவளி யுயர்வானென்றும்
உலவாத்தொல்புகழுடையோய் என்றும்
பொருளுநற்பூதப் படையோயென்றும்
தெருணின்றுலகினிற் றெருட்டுமாறே
ஈங்கிவை முதலா வண்ணமும்வடிவும
ஓங்குநின்பெருமை யுணர்த்தவுமுணராத்
தற்கொலிமாதர் தம்மிடைப்பிறந்த
சொற்பொருள் வண்மையிற் சுழலுமாந்தர்க்கு
ஆதியாய் அறுதொழிலாள ரோதலோவாவொற்றியூர
சிறுவர்தம் செட்கையிற் படுத்து
முறுவலித்திருந்தி நீ முகப்படுமளவே”

என்னும் சுருதிகள் பற்றி அறிந்துகொள்ளப்படும்.



# "ஆலயந் தொழுவது"



"ஆலயந் தொழுவது சாலவு நன்று" என்பதற்கு தேவாலயத்தை வணங்குவது மிகவு நல்லது என்பது பொருள். இனி ஆலயம் என்பது யாது? அது எதன் பொருட்டு, எவ்வாறு அமைக்கப் பெறுவது? ஏன் அதைத் தொழவேண்டும்? அதனால் எய்தும் பயன் என்? என்பனவாதிய பல வேறு விஷயங்களை ஆராய் தல் இவ்விடத்து ஏற்றதாகும்.

ஆலயம், அண்டாலயம், பிண்டாலயம், மனதாலயம், பிரதிட்டாலயம் என நான்கு வகைப்படும். இவற்றுள் இங்கே கூறவந்தது பிரதிட்டாலயத்தையே யாம். அறிவின் ஆரம்ப காலத்திலேயே போதிக்க வந்த நூலாதலினென்க. பிரதிட்டாலயம் என்பது திரு மதில், கோபுரம், பலிபீடம், துவஜ ஸ்தம்பம், மூர்த்தி கள் முதலாக அமைக்கப்பெற்று பற்பல ஸ்தலங்களி லும் கண்கூடாக விளங்குவனவேயாம். மேற்சொல்லிய ஒவ்வொன்றும் இன்னபடி யிருக்கவேண்டுமென்றும் ஆகமாதி நூல்கள் விரித்துக்கூறும். இத்தகைய ஆல யங்களையும் மூர்த்திகளையும் வணங்கவேண்டிய முறை யும் பலவேறு வகைப்படும். மதத்துக்கும் காலத்துக் கும் இடத்துக்கும் தக்கபடி முன்னமே நமது பெரி யோர்களால் இவ்வரையறையனைத்தும் சாஸ்திரவாயி

னாகவும் வழக்க முறையாகவும் ஏற்படுத்தப்பெற்றுள்ளன.

இந்த ஏற்பாட்டின்படி ஆலயத்துட்சென்று கடவுளை வணங்கிவருதல் நம்மில் யாவரும் அறிந்ததே. தற்காலத்தில் கடவுள் வணக்கத்துக்கு ஆலயம் வேண்டுவதா? எங்கும் நிறைந்து சுட்டமுடியாப் பரம்பொருளாகி விளங்கும் கடவுளை ஓர் ஆலயத்தில்இருப்பித்து வணக்கமுதலிய செய்தல அவசியமா? என்பன ஆதிய சங்கைகள் சிலரால் வெளிப்படுகின்றன. பாசத்தால் பந்திக்கப்பட்ட ஆன்மாவானது முற்றுணர்ச்சியில்லாமலும் அறிந்ததை மறக்கும் சுபாவமுடையதாயும் மனம் ஒரு வழிப்படப் பெறாததாயும் இருத்தலால் இந்த ஆன்மாவினது அறிவின் தகுதிககு எதையும் ஓர் நியதிப்படுத்தாவிடில் அதன் நிலை ஸ்திரப்படாமல் மறப்பெனுங் கடலில வீழ்ந்து கெட்டேபோகும். ஆதலின் கடவுள் வழிபாடு எப்போதும் செய்து ஏகாக்கிர சித்தமுற்றுச் சலனமற்ற நிலையையடைந்து அதனால் மோக்ஷமடையும்படியிருக்கிற ஆன்மவுணர்ச்சிக் கேற்பவே கோயிலையமைத்துக் கோபுரங் கட்டிக் கடவுளை யெழுந்தருளச் செய்து வாத்திய முதலிய முழக்கத்தாலும் தீபாலங்கார முதலிய ஒளியாலும் செவியறிவும் கண்ணறிவும் அடுத்தடுத்து அவைகளிற் செல்லும்படியாகவும் அப்படிச் செல்லும்போதெல்லாங் கடவுள் சிந்தனை மேலிடும் படியாகவும் அமைத்துவைத்த நமது முன்னோர் மதிவலிமை மிகப் பாராட்டற்பாலதே. தொன்று

தொட்டு இவ்வழக்கம் இல்லாதிருப்பின் கடவுளைப்பற்றிய தியானமே உலகத்தைவிட்டு ஓடிப்போயிருக்கும் என்பதுறுதி. நாம் வெளியேறிச்செல்லுங் காலத்தில் ஒரு நண்பர் வீட்டைக் கண்டவுடனும் அவர் பேசுந் தொனியைக் கேட்டவுடனும் அந்தச் சினேகிதரைப் பற்றிய நினைவு நமக்கு வருகிறதன்றோ? அதுவரையில்லாநினைவு அப்போது வந்ததற்குக்காரணம்வீட்டுக் காட்சியும் வார்த்தையின் ஒலியுமல்லவா? இதுபோல் மாயையிற் சிக்குண்டு மயங்கிக் கிடந்த நம் அறிவிற்குக் கடவுளைப்பற்றிய அறிவும் பக்தியும் கொடுப்பது ஆலயமே என்பது பிரத்தியக்ஷப்பிரமாணம். ஆலயத்தில் மணியடித்த ஓசை கேட்டவுடன் பயபக்தி மேவிட்டு வணங்குவோர் பல்லோர். இங்ஙனமே உற்சவாதிகளெல்லாம் ஆன்மஞானம் பிறவழியிற்சென்று மயங்குங்காலை அதனைத் திருப்பிக் கடவுளுணர்ச்சியிற் கூட்டக் கருதியே அமைக்கப்பெற்றனவாம்.

ஆனால் கடவுளைத்தானே வணங்கவேண்டும்; ஆலயத்தை வணங்கும்படி கூறுவது எதன்பொருட்டு? என்னிற் கூறுதும்.

ஆலயம் என்னும் சொல் அதனுள்ளிருக்கும் கடவுளையுங் குறிக்கும். அன்றியும்ஆலயத்துட்சென்று கடவுளைத் தெரிசித்து வணங்குதல் எல்லாருக்கும் இயலாதது பற்றியும், திருமதில் கோபுரமாகிய ஆலய உறுப்புக்களை வணங்கும் வணக்கம் கடவுள் வணக்கமாகவே விதித்தமையாலும் எல்லாருக்கும் பொருத்தமாறு ஆலயந் தொழுவது என்று கூறியவாறுமாம்.

எந்த மதஸ்தர்களும் தங்கள் தங்கள் கடவுளை வணங்குவதற்கு ஓர் இடம் ஏற்படுத்தி அதனுட்சென்று நியதிப்படி வணங்கிவருதல் இன்றும் யாவரும் அறிந்ததொன்றே! இதனாலன்றோ,

"மூர்த்தி தலந்தீர்த்தம் முறையாய்த் தொழுபவர்க்கு
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

எனத் தாயுமானவர் கூறினர். சைவசமயாசாரிய சுவாமிகளும்.

"திருக்கோயி லில்லாத திருவிலூரும்"
"கோலக்கோபுரக் கோ கரணஞ்சூழாக்கால்களாற் பயனென்"

எனத்திருவாய்மலர்ந்தருளினர். இப்படிப்பட்ட உதாரணங்கள் பலவுள. திருக்கோவில் கட்டுவித்துப் பேறுபெற்றோர் சரிதமும் பலவுள. ஆலயவணக்கத்தைப் பற்றிக் கோவுங்காத புராணமுமுண்டோ? இல்லை. இதை நோக்கும் மாணவர்கட்கு ஓர் சிறுகதை கூறுதும். இரண்டு சிநேகர்கள் ஒருநாள் மாலையில் சந்தித்தனர். ஒருவன் கோயிலுக்குப் போக மற்றவனை அழைத்தான். மற்றவனோ அதைமறுத்து வேசி வீட்டுக்குப் போக அழைத்தான். முடிவில் அவரவர் எண்ணப்படியே ஒருவன் கோவிலுக்கும் மற்றவன் வேசிவீட்டுக்கு மேகினர். கோவில் சென்றவன் காலில் கல்தட்டிச் சிறிது காயப்பட்டு மீண்டான். வேசியகஞ் சென்றவனோ திரும்பும்போது ஒரு பொற்காசு கண்டெடுத்து மீண்டான். பின் இருவரும்சந்தித்துப் பேசுங்கால் பொற்காசெடுத்து வந்தவன் அக்காசைக்

காட்டி “ நண்பனே நான் வேசிவீடு சென்று பொற் காசு எடுத்து வந்தேன்: நீ கோவில் சென்று ரத்தக் காயப்பட்டு வந்தாய்” என்று கூறிக் கேலிசெய்தான். அவ்வேளை ஒரு பெரிய சோதிடர் வந்து இருவர் வாய்மொழியும் கேட்டு இருவர் ஜாதகமும்பார்த்துப் பலன் கூறினர். அதாவது கோவில் சென்றவனுக்கு அன்று நவக்கிரகப் பலன்படி உத்திரக்கல் தலையில் விழுந்து மண்டையுடையவேண்டியதென்றும் அவன் நல்ல காரியத்தில் சென்றிருந்தானாகலின் கடவுள் கருணையால் “ தலைமட்டாக வந்தது முடிமட்டாக” என்றபடி அற்பக்காயத்துடன் தீர்ந்தது எனவும் பொற்காசு எடுத்தவனுக்கு அவன் ஜாதகப் படி அன்று பெரிய ரத்தினப்புதையல் கிடைக்கவேண்டியதெனவும் அவன் தீயகாரியத்தில் சென்று பாவஞ்செய்தானாதலின் அதற்குப்பதில் ஒரு சிறிய பொன்காசோடு அவன் அதிர்ஷ்டம் தீர்ந்ததெனவும் கூறினர், என்று நம்முதியோர்கள் நமது பாலப் பருவத்தில் புகலக்கேட்டிருக்கின்றோம். இது பொய்க் கதையாயினும் நன்மை, தீமையின் பலாபலனைச் சிறுவர்க்கு விளக்குவதாகலின் இவண்குறிக்கப் பெற்றதாயிற்று. ஆலயத்துட்சென்று வரும்போதெல் லாம் அடியார்பழக்கம் ஏற்படலானும் அந்தநேரம் முற்றும் சிந்தனை நல்வழியிற் பழகிப் பழகி முதிர்ச்சி பெற்றுப் பக்குவப்பட்டு முத்தியடைதற்கு ஏதுவாக முடிதலானும் நன்று என்று மட்டுங்கூறாது “சாலவு நன்று” என்று வற்புறுத்தியதாகும்.



# உண்மையாராய்ச்சி.

## ("கடவுள் வடிவம்")

கருத்துப்புலனுதற்குரிய பொருள், செவிப் புலனுதற்குரிய ஒலிவடிவால் விளக்கமடையவில்லையா? செவிப்புலனுதற்குரிய அவ்வொலிவடிவம் கட்புலப் படும் வரிவடிவால் நிலைபெற்று, அக்கருத்துப் பொருளை நிலைபெறுத்த வில்லையா? கருத்துப் பொருள் ஒலிவடிவினும், வரிவடிவினும் விளக்க மடைந்து மனிதர் கருத்திலே நிலைபெறுமாயின், மனிதர்களது தன்மையை நோக்கி, அவ்வொலிவடிவம், வரிவடிவம் என்னும் இருவடிவங்களும் அவர் தம் கருத்துப பொருள்கட் கத்தியாவசியம் இருக்க வேண்டுவனதாமே? அவ்விருவடிவங்கள் தவிர வேறு வடிவங்கள் வேண்டியிருப்பினும், அவற்றையும் அமைத்துக்கொள்ள வேண்டுவதுதானே? மனிதர் கருத்துச் சிலகாலம் வரையும் கருத்துவடிவமாயிருந்து, அதன்பின் சமிக்கை வடிவமாயும், ஒலிவடிவமாயும், வரிவடிவமாயும் வெளிப்பட்டு விரியவில்லையா? கருத்துப்பொருள் கருத்திலே யிருக்கும்பொழுது, அப்பொருள் எக்கருத்திலே தோன்றிற்றோ, அக் கருத்திலேதானே யிருக்கும்? அக்கருத்திற்குத் தானே அது உபகாரப்படும்? வேறுகருத்திற் குபகாரப்படவேண்டுமாயின் அது தன் வடிவத்தையே

யன்றிச், சமிக்கை, ஒலி, வரி, என்னுமிவையும் இவை போன்றனவுமாகிய வேறு வடிவங்களையு மொடுக்க வேண்டுவதுதானே? சமிக்கையை நாடகமெனவும், ஒலியை இசையெனவும், வரியை இயலெனவும் உலகம் வழங்கும்போலும்; அவற்றை அஃதிவ்வாறன்றி மற்றெவ்வாறு வழங்கினும் வழங்குக. இனி, கருத்துப்பொருளக்கருத்துப்பொருளாகவே கிரகித்தால் அதன் உண்மையினைத்தும் உள்ளபடியே விளங்கும். ஆகுல், மனிதனுக்கு அவ்வாறு கிரகிக்கும் ஆற்றலின்மையால், அவனுக்கு அப்பொருள் வேறுவடிவெடுத்து வரநேர்ந்தது; அவ்வாறு நேரும்பொழுது, முதல் முதல் முகத்திலும், அதன்மேல் மற்ற உறுப்புகளிலுமாகப் பலவகைப்பட்ட சமிக்கை வடிவெடுத்தது; அலலது எடுக்கின்றது. எடுக்கும்பொழுது அக்கருத்து தான் தோன்றிய உள்ளத்தோடு கூடிய அம்மனித உடம்பிருக்கும் வரையிலுமே அதன்கண் அம்மனிதனது சங்கற்பப்படி இருந்து அது அழியும்போது தானும் பிறர்க்கு விளங்காமல் உடன் போய்விடுகின்றது. இதனுல், அச்சமிக்கையும், அது தோன்றுதற்கிடமாகிய உடம்பும்போன்ற வேறோர் வடிவம் கற்பித்துவைத்து, அவ்வடிவிலே அமைக்கப்படும் சமிக்கையால், அவ்வடிவத்தை ஒத்த முன்னைய உடம்பின் உள்ளத்தே நிகழ்ந்த கருத்துப்பொருளைப் பாதுகாக்க வேண்டிற்று.

" அகம்பொதிந்த தீமை மனமுரைக்கு முன்னர்
முகம்போல முன்னுரைப்ப தில் "

என்று அதனை அக்கருத்தைவிட நேரே முற்படத் தெரிவிக்குமென்று கொண்டாருமுளர்.

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்"

என அதன்றெளிவுகூறி யவ்வளவிலமைந்தாரும்உளர்; எங்ஙனமாயினும், சமிக்கை கருத்துப்பொருளை வெளிப்படத் தெள்ளிதிற்றெரிக்கு மென்பது எல்லார்க்கு மொப்பமுடிந்த தொன்றாம். தலைமைபற்றி முகங்கூறினும்

"யானோக்குங்காலை நிலநோக்கும் நோக்காக்காற்,
றானோக்கி மெல்ல நகும்"

எனவும் "உணர்த்துவதும் கைக்காட்டு" எனவும் "இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டி" எனவும் வரும்வகையாற் கருத்துப்பொருள் பிறவுறுப்புகளினும் வெளிப்படத்தோன்றுதல் உய்த்துணர்ந்து கொள்ளப்படும்,

இனி, ஒருவன் தன்கருத்தை எழுதிவிடுக்கும் வரிவடிவத்தாற் பெறப்படும் பொருட்டெளிவினும், அதனையே அவன் ஒலிவடிவாற் குறிக்குமிடத்து அவன்வடிவை நோக்காதே கேட்பின் மிக்கதோர் தெளிவெய்தும்; அதனை நேரே கண்டவிடத்து.

"தெளிவுகுருவின் றிருமேனிகாண்டல்,
தெளிவு குருவின் றிருவார்த்தை கேட்டல்"

னை வருதல் பற்றியும் இவ்வுண்மை தெளிந்துகொள்ளப்படும்;

கருத்துப்பொருளைப் பிறர்க்கு அக்கருத்துணர்த்தாமையாற், சமிக்கையும், சமிக்கை உணர்த்துதல் திரம்பாமையால் உரையும், உரையானும் முற்கூறிய சமிக்கையானும் அப்பொருள் நிலைபேறின்மையின் வரியும் வேண்டப்பட்டனவன்றோ வெனின், ஒக்கும்; கருத்திற்குச் சமிக்கை தூலமும், உரைக்கு வரி தூலமுமாமன்றோ! ஆகவே தூலத்தாற் சூக்குமம் விளங்குதல் ஒருதலையாம். ஆயினும், கருத்துப்பொருளின்றி, இவ்வனைத்தும் எவ்வளவாக விரியினும் பயனின்றாதல் போல, கருததி னுண்மைக்கணின்ற சமிக்கை முன்னுணரப்படினன்றி, அச்சமிக்கை தனித்தே தொனிக்க நிற்கும் உரையும், அவ்வுரை முன்னரே கேட்கப்படினன்றி அவ்வுரையின் பிரதிநிதியாய்நின்ற தனைக்கேட்பிக்கும் வரியும் உள்ளபடி பயன்படுதல் இலவாம். கருத்தின்னதென் றறிவித்தற்கே சமிக்கை முதலிய வனைத்தும் எழுந்தனவாயினும், அவற்றுட் சமிக்கையொன்றே கருத்தி னுண்மைக்கணின்று, அதனை உடனே வெளிப்படுக்கும் 'அதன்றால வடிவாகலின், அஃதெவ்விதத்தாலாவது காக்கப்படின், மிகப்பயன் செய்யு மென்பது கருதியேபோலும், சிலர் அல்லது பலர், அச்சமிக்கை தோன்றற்கிடனும் நின்ற உடம்போடதனையு மமைத்து வடிவமைப் பாராயினர். இவ்விதத்தை படிப்படியாய்த் தெய்வத்தான் அல்லது தெய்வத்திருப்பதிந்த மனிதரால் வளர்ந்

கப்படும்; பொழுதுதான், அன்பர்க்கருள் செய்த அருள் வடிவங்களும, தத்தம் பொருட்குறிப் புணர நின்ற சமிக்கையமைந்த விக்கிரக வடிவங்க ளெடுத் திருக்கலாமென் றெண்ணுகின்றேம்.

இனி, உயிர் உடலின்றி மற்றேருயிர்க்கு விளங் காமை காண்கின்றேம். உயிர்க்குயிராகிய கடவுளும் அவ்வுயிரின்றி விளங்காமை காண்கின்றேம். கடவுட் கவ்வுயிரும் உடலும் வடிவமாகின்றன. கடவுட் கருத்து அவ்வுயிரிடத்தும், உடலிடத்தும், அவற் றைச் சூழ்ந்த ஏனை உலகிடத்தும் வெளியிடப்பட் டிருக்கின்றது. ஆதலால் அதனை அவ்வுயிர் தன்னி டத்தும், தான்பெற்ற உடம்பினிடத்தும், தனக்கென வமைத்த கரணத்திலும, புவனத்திலும், போகத்தி லும் வைத்தறிகின்றது. கடவுட்கருத்தும் உயிரின் பொருட்டு இத்தனை வடிவங்க ளெடுக்கின்றது. எடுத் தும் நிரம்பாமையின், அக்கடவுட்கருத்து விளங்குதற் குறித்தாய் அதனண்மைக்கணின்ற சமிக்கையை வேண்டிற்று; அஃதோருடம்பை வேண்டிற்று; அஃ தேபோலும் திருவருட்குறி எனப்படும் கடவுள் விக் கிரகம் என்பது!

கருத்துப்பெரிதாயினும் அதனை உணர்த்தவந்த சமிக்கை முதலியன சிறியவாயினும், அக்கருத்து அச் சமிக்கை முதலியவற்றின்கணடங்கி விளங்காமற் போகவில்லை; அவ்வாறே சமிக்கை முதலியன கருத் திற்குத் தூலமாயினும் நுட்பமாய் விரியும் கருத்தை

அங்ஙனம் விரியவொட்டாது தடுக்கவுமில்லை. இது போலவே கடவுட்கருத்து அல்லது கடவுட்குறிப்பு மிகப்பெரிதாயினும் அக்கருத்தாற்படைக்கப்பட்ட பொருள்களினிடத்தே அமைந்த போதுமளவில் அடங்காமற்போகவில்லை; அக்கருத்திற்கவை தூலமாயினும் அதிநுட்பமாய் மிகவிரிந்தோங்கு மக்கருத்தை நிகழவொட்டாது தடுக்கவுமில்லை. உயிர் உடம்பாலும் கடவுள் உயிர் முதலியவற்றாலும் விளக்கமுறுதலே யன்றி விளங்காதொழிதலில்லை. நுட்ப பதார்த்தங்கள் தாம் விளக்கமுறுதற்குத் தூலபதார்த்தங்களை அவாவியே நிற்கின்றன; இங்ஙனமாகவும் வடிவில்லாத உயிர்க்கு வடிவில்லாத கடவுள், வடிவமைத்து, அதன் வழியாய் அவ்வுயிர்தன்னை யறிந்துகொள்ள வைத்தாற்போலத், தம்மையும் அவ்வழிபற்றியே அறியவைத்திருப்பாரேயன்றித் தம்மைமாத்திரம் நேரே அவ்வுயிரறிந்துகொள்ள வைத்திருப்பாரா? வைத்திருந்தாலுந்தா னென்ன? அவ்வுயிர் தன்பழக்க மிகுதியால் தன்னைப்போலவே தன்னைப்படைத்த கடவுளும் உடம்புடையவராயிருக்கலாமென்று கருதினாற்குற்றமா? உடம்பில்லாமல் உயிரைத்தனியேவைத் துணரக்கூடியவர் யாவர்? உயிரையும் உடம்பல்லா கரணங்களல்ல, புவனங்களல்ல, போகங்களல்ல என்று அன்மைச்சொற்களால் சொல்லுதலேயன்றி இன்னதுதா னுயிரென்று அதனை நேரேயறிந்துசொல்வார் யாவர்? அதுபோலவே கடவுளையும்,

"பூதங்களல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ளமதியின்
பேதங்களல்ல வினையின்றி நின்ற பிறிதல்ல "

வென்று அன்மைச்சொற்களாற் சொல்லிக்கொண்டு கிடந்து தடுமாறுவதேயன்றி இதுதான்கடவுளென்று கண்ணுக்காவது கருத்திற்காவது காட்டினவர் யாவர்? குணத்தைக் குணியைவிட்டுப்பிரிய வியலாததும், உயிரை உடம்பையின்றி யறியவியலாததுமாகிய உயிர் தன் முதல்வனையும் ஏதாவதொருவகையால் ஓர் பொருளில்வைத்து அறிந்து வழிபடுமேயன்றி வேறெவ்விதத்தால் வழிபடும்? கடவுளை உயர்திணையாகவும் அஃறிணையாகவும் கூறிவழிபடுகின்றார்கள். அது குற்றமாகுமா? தனக்குத்தெரியாத தொன்றைத் தெரிந்த தொன்றில்வைத் தறியலாமேயன்றித் தெரியாத வேறொன்று தேடுவதும் அதில் வைத்தறிவதும் ஒருவற் கெவ்வாறு கூடும்? இது நிற்க.

குறிப்பு:—உண்மையாராய்ச்சியுரை இவ்வளவே திருநாவுக்கரசில் வெளிவந்தது.



# தனிப்பாடல்.

## நெஞ்சொடுகிளத்தல்.

மெய்யே நினையாய்
மெய்யே உரையாய்
ஐயோ! இனியோ
உய்வாய் உளமே?

வாழிய வுளமே, வாழிய நாவே,
வாழிய நாவின் மன்ன
னரசு வீற்றிருந்தெமை யாளுதற்
பொருட்டே.

உடலே கடலே, உளமே கல்லே;
கடறனைக் கற்கொடு கடத்தல்
அரிதே; எளிதே அம்ம
திருநாவுக்கர செனுந் திருப்பெயர்
சொலினே!

அப்பன்பேர் சொல்வோம் அரசின் அடிக்குடியாய்
எப்பொழுதும் நன்றே யியற்றுவோம் ஒப்பில்
மருணீக்கி யார்க்கினிய ராவோமற் றன்னார்
அருணோக்கி வாழ்வோம் அறிந்து.

இயன்றவா வெண்ணி யியல்புணர்ந்தோ ரென்று
முயன்றவா நாமு முயன்றும்—பயன்றவா
நன்புறலா மெங்கள் அரசின் திருவடிக்கீ
ழின்புறலா நெஞ்சே யெழு.

அப்பா வரசே யருமைக் குழந்தாய் நீ
யெப்போது மெய்க்கே யிருந்தியா லெப்போது
மெய்யே நினைத்தியான் மெய்யே யுரைத்தியான்
மெய்யே விளக்குதியால் வேறு.

எழுகின்ற ஞாயிறொத் துள்ளே
கிளர்ந்தங் கிருளறவே
உழுகின்ற சேவடிக் கோர்மனு
வுண்டன் புவட்டெடுத்தின்
பழுகின்ற கண்ணீர் மலங்கரைத்
தோடவென் னப்பனென்றே
தொழுகின்ற கைக்கொன் றிலதெனுந்
துன்பந் துடைப்பதுவே.

வேதந் தமிழ்பயில வேண்டுந் திருநாவி
னுதனமை யாளுடையா னம்பெருமா—னோதும்
பொருளே பொருளப் பொருளுணரப் போந்த
வருளே யினிய வருள்.

அருளின்றி யொன்றை யறியும்
பொழு தவ்வறிந்ததற்குப்
பொருளின்றிப் போதலை யுற்றுணராப்
பெரும் புல்லறிவிற்
றெருளின்றி நின்னடி சிந்தித்தற்
கின்றிச் செறிந்திருக்கு
மிருளொன் றெனக்கு விடியுங்கொ
லோவரு ளென்னப்பனே.



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 8 | 13 | பெருவ | பெறுவ |
| 18 | 10 | வேறோர் | வேற்றோர் |
| 34 | 12 | ணிறைந் | ணிறைந்து |
| 35 | 14 | வரண | வாண |
| 36 | 19 | பகுத்திக் | படுத்திக் |
| ,, | 25 | யில்லை | பில்லை |
| 37 | 10 | யியிறல் | பயிறல் |
| 40 | 27 | பயிலிது | பயிலுது |
| 52 | 25 | மென்மேலும் | மேன்மேலும் |
| 54 | 2 | ஒன்றுக | ஒன்றுக் |
| 61 | 3 | பெரும்பான்மை | பெரும்பான்மை |
| ,, | 5 | அறிய | அரிய |
| 67 | 13 | வாழ்வாா | வாழ்வான் |
| 69 | 19 | செயதார் | செய்தார் |
| 70 | 4 | ஒரு | ஒரு |
| 93 | 7 | ஒன் | ஒன் |
| 101 | 21 | உறக்கமும் | உறக்கம் |
| 103 | 18 | கண்ணுதலார் | கண்ணுதலா |
| 105 | 3 | உறறவர் | உற்றவர் [ம் |
| 110 | 14 | ஆதியாய் | ஆதியாய |

## சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடுகள்.

| | | ரூ. அ. |
|---|---|---|
| 1. திருவடிப்புகழ் மாலை மலர்-1. (விநாயகரகவல், கந்தர் கலிவெண்பா, திருச்செந்தூரகவல்) | விலை | 0—3 |
| 2. திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி உரையுடன். இது அதிவீரராமபாண்டியரால் அருளிச் செய்யப்பட்டது. இதனைக் குட்டித்திருவாசகம் என்பர். | ராப்பர் விலை | 1—0 |
| | கலிக்கா விலை | 1—4 |
| 3. சோமேசர் முதுமொழிவெண்பா உரையுடன். இது ஸ்ரீமத் சிவஞான சுவாமிகளால் அருளிச செய்யப்பட்டது. இப்போது புதிதாய்க் கதைக குறிப்புடன் வெளிவந்துளது. | ராப்பர் | 1—8 |
| | கலிக்கா விலை | 1-12 |
| 4. பூப்பிள்ளை அட்டவணை ஸ்ரீமத் அம்பலவாணதேசிக சுவாமிகளால் தமது தவசுப் பிள்ளைக்குச் சைவ சித்தாந்த நுண்பொருள்கள் எளிய வசன நடையில் அருளிச் செய்யப்பட்டு இதன்கண் வெளிவந்துளது | விலை | 0—2 |
| 5. கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி | விலை | 0—3 |
| 6. சித்தாந்தப் பிரகாசிகை | விலை | 0—3 |

## வேறு நூல்கள்.

| | | |
|---|---|---|
| பெரிய புராணப் பதவுரை 4-பாகமும் | ... | 20 0 |
| புலவர் புராணம் மூலம் (32 சைவப் புலவர்கள்) | | 2 0 |
| திருப்போரூர் சந்நிதி முறை உரை | ... | 4 8 |
| சைவ மகாசங்கப் பிரசங்கத்திரட்டு | ... | 2 8 |
| தமிழ் நாவலர் சரிதை | ... | 0 12 |

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்.
297-தம்பு செட்டித்தெரு, சென்னை.